ஸ்ரீ

# கோதண்டராமன்

AR. Subramanian.
Karaikudy
S.I.Ry

கணபதி, குமரன், கோபாலன் என்னும் நூல்களின்
ஆசிரியர்

**பூ. மு. முருகேச முதலியார்**

எழுதியது



துரைத்தனத்தார் அங்கீகரித்தது

[8-4-'30 கெஜட் 229-ஆம் பக்கம் பார்க்க]


சென்னை :

ஸி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்

1931

ரெஜிஸ்தர் செய்தது] [விலை அணா எட்டு

## INTRODUCTION

The Story of Rama of the Bow (Kodandarama) has aroused in Hindu minds a more abiding interest than any other; because the human aspects of his character appeal to us more than that of any other *avatara*. He has set, before the average erring man, perfect examples of the ideal son, the ideal husband, the ideal brother, and the ideal ruler of men. The story has been narrated in every kind of literary form; and every author, has, while adhering to Valmiki's version of the main story, made slight alterations in details, so as to suit the changing ideas and tastes of men. Mr. P. M. Murugesa Mudaliar has retold the story for the Tamilian youth of modern times, in a pleasing and effective manner. The author has cultivated a charmingly

# பொருள் அடக்கம்



ஸ்ரீ

# கோதண்டராமன்

---

நாடிய பொருள்கைகூடும் ஞானமும் புகழுமுண்டாம்
வீடியல் வழியதாக்கும் வேரியங் கமலநோக்கும்
நீடிய வரக்கர்சேனை நீறுபட் டழியவாகை
சூடிய சிலையிராமன் தோள்வலி கூறுவோர்க்கே.

## இராமாயண வரலாறு

உலகில் உள்ள எல்லாத் தேசங்களிலும் சிறந்து விளங்கும் நமது இந்தியா தேசத்தில் பல வருடங்களுக்கு முன்னரே புஜபல பராக்கிரமம் உள்ள பல வீரர்கள் தோன்றி இந்தியாவின் பெருமையை உலகெங்கும் பரவச் செய்தனர். அத்தகைய வீரர்களுள் தலைமையாகச் சிறந்து நிற்பவன் நமது **ஸ்ரீ கோதண்டராமனே.** இராமன் சரிதத்தைச் சொல்லும் நூலுக்கு இராமாயணம் என்று பெயர். இஃது இதிகாசங்கள் இரண்டனுள் ஒன்று, மற்றொரு இதிகாசம் மஹாபாரதம். இராமாயணத்தை முதலில் ஸ்ரீ வால்மீக முனிவர் சம்ஸ்கிருதத்தில் காவியமாகச் செய்தனர். காவியங்களுள் இது முதன்மை பெற்றதாதலால் இதனை ஆதி காவியம் என்றும் சொல்லுவர்.

ஸ்ரீ கோதண்டராமன் சரிதத்தினல் நாம் அறிந்து கொள்ளும் விஷயங்கள் யாவையெனில்,

1. பெரியாரை வழிபடுதல்,
2. சொன்ன சொல்லைக் காப்பாற்றல்,
3. குரு சிஷ்யக் கிரமம்,
4. மாதா பிதாக்களிடத்தில் புத்திரன் நடந்து கொள்ள வேண்டிய விதம்,
5. சகோதரரிடத்தில் அன்பு,
6. அதருமத்தின் விளைவு,
7. இழிசன ரியற்கை,
8. மனைவியும் புருஷனும் ஆசரிக்க வேண்டிய நீதிகள்,
9. எல்லாரிடத்திலும் தயை,
10. நன்றி மறவாதிருத்தல்,
11. பிறர் பொருளை விரும்பாதிருத்தல்,
12. தைரிய முள்ளவனுய்ச் சாந்த (மடைந் திருத்தல்,
13. யுத்தகளத்தில் புறங்காட்டாது நிற்றல்,
14. சத்துருக்களிடத்தில் செலுத்த வேண்டிய தர்மம்,
15. அடைக்கலம் புகுந்தவர்களை ஆதரித்தல்,
16. எந்தக் காரியத்தையும் சித்தியைநாடி நிதானித்துச் செய்தல்

முதலியனவாம்.

## வால்மீகர்

வால்மீகர் முற் காலத்தில் இருந்த மகரிஷிகளுள் ஒருவர். இவர் வட நாட்டில் பிராமண குலத்தில் பிறந்தவர். சிறு வயதிலேயே இவர் இழிந்த குண முள்ளவர்களிடத்தில் பழகி ஒழுக்கமின்றி இருந்தார். பின்னர் இழிந்த குலத்து ஸ்திரீயையும் மணந்தார்; தம் குடும்பத்தைக் காப்பாற்ற வழிப்போக்கர்களை அடித்துத் துன்பப்படுத்தி அவர்கள் கைப் பொருள் களைக் கவர்ந்து செல்வார்; ஒருநாள் மகாத்மாக்கள் சிலர் யாத்திரை செய்து கொண்டு இவர் வசிக்கும் காட்டின் வழியாகச் சென்றனர். அவர்களையும் இவர் துன்பப்படுத்தச் செல்லுகையில் அவர்கள் இவரிடம் கருணைகூர்ந்து, பல நீதிகளை இதமாகச் சொல்லி, இவர் செய்யும் காரியம் பாபமானது என்று தெரியப் படுத் தினர்; இன்னும் இவர் செய்யும் கொள்ளைத் தொழிலை விட்டு நீங்கிச் சன்மார்க்கத்தில் சுகஜீவனம் செய்ய வழி காட்டி, நம்மைப் படைத்துக் காக்கும் கடவுள் வழிபாட்டு முறையையும் கூறினர்; இவற்றிற்கு ஆதார மாகத் தன் திறத்தில் யாவரும் மனம் களித்திருக்கப் பெற்றவனான ஸ்ரீராமன் நாமத்தைத் தோத்திரமாகச் சொல்லவும் அருளினர்.

அன்றுமுதல் இவர் முன் செய்துவந்த பாபத் தொழில்களை யெல்லாம் விட்டுச் சன்மார்க்கத்தில் நடந்து 'இராம, இராம' என்று நடக்கும்போதும், இருக்கும்போதும் சொல்லிக்கொண்டே இருந்தனர். இப்படி இராம நாமத்தைச் சொல்லித் தியானத்தில் இருக்கும் வேளையில் இவர் பக்கலில் இருந்த புற்று

இவர் தேகத்தை மூடிக்கொண்டது; பிறகு மழை பெய்யக் கரைந்தது. இவர் கடவுள் தியானத்திலிருந்த போது வன்மீகம் (புற்று) மூடிப் பிறகு புற்றுக் கரைய வெளிவந்தவராதலால் **வால்மீகர்** எனக் காரணப் பெயர் பெற்றனர்.

ஒருநாள் ஸ்ரீவால்மீக முனிவரின் ஆச்சிரமத்துக்கு நாரதர் என்னும் பெரியார் வந்தனர். அவரிடம் வார்த்தையாடிக்கொண் டிருக்கும்போது உலகத்தில் அதிதீரனும், சத்தியசீலனும், எண்ணிய காரியத்தை எளிதில் முடிக்கக்கூடியவனுமான ஒரு வீரனது சரித்திரத்தைச் சொல்லவேண்டு மென்று வால்மீகர் கேட்க, நாரதமுனிவர் தசரதர் புத்திரனான ஸ்ரீ கோதண்டராமனே வீராதி வீரனென்றும், குணமென்னும் குன்றேறி நிற்கும் இரவிகுலதிலகனென்றும் சொல்லி, அவருடைய சரித்திரத்தை விரிவாக எடுத்து உரைத்துச் சென்றனர். அன்றுமுதல் வால்மீகர் ஸ்ரீராமனுடைய வீரத்தையும் நற்குணத்தையும் நினைந்து நினைந்து ஆனந்தமுற்று வந்தனர்.

ஸ்ரீராமப் பிரபுவின் சரிதத்தை நினைந்துகொண்டே இவர் ஒரு நாள் ஒரு நதியின் கரை யோரமாக உலாவி வரும்போது அந் நதிக் கரையில் செழித்து ஓங்கி வளர்ந்திருந்த ஒரு மரத்தின்மேல் இரண்டு அன்றிற் பறவைகள் கூடி ஆடிக்கொண்டிருந்தன. அச் சமயம் வன்னெஞ்சமுடைய வேடன் ஒருவன் அப் பட்சிகளில் ஒன்றைக் குறிபார்த்துத் தன் அம்பினால் எய்தான். அம்பினால் தாக்கப்பட்ட பறவை இரத்தம் ஒழுக மண்மேல் விழுந்தது. அதைக் கண்ட மற்றொரு பறவை, கலங்கிக் கூச்சலிட்டது.

வேடனால் எய்யப்பட்டு விழுந்த பட்சியையும், அதன் அருகில் கத்திக் கதறித் துக்கிக்கும் மற்றொரு பட்சியையும் கண்டு ஸ்ரீ வால்மீகர் மனமிரங்கி வேடனைப் பார்த்து, 'அடா வேடா! இப்படியும் செய்யலாமா? இப் பட்சிகள் ஒன்றோடொன்று சேர்ந்து அழகாய்ச் சப்தித்துக்கொண்டு இருந்ததைக் கண்டு களிக்காமல், அடா பாவி! அவைகளுள் ஒன்றைக் கொன்றனையோ, இது தகுமா! இது தர்மந்தானா?' என்று வெகுண்டு கூறினர்; அப்படிக் கூறினது ஒரு சம்ஸ்கிருத சுலோகமாக வெளிவந்தது; அந்தச் சுலோகத்தையே ஆரம்பமாகக் கொண்டு பல சுலோகங்களினால் ஸ்ரீ கோதண்டராமனது திவ்ய கல்யாண குணங்களை விளக்கி இராமாயணமென ஒரு காவியத்தைச் செய்தார்.



## கம்பர்

வால்மீக மகரிஷி சம்ஸ்கிருதத்தில் செய்த இராமாயண மகா காவியம் என்னும் ஸ்ரீ கோதண்டராமன் சரிதை எப்படித் தமிழில் வந்தது என்பதைப் பற்றித் தெரிந்து கொள்வோம். நமது தமிழ் நாட்டில் சேர, சோழ, பாண்டிய அரசர்கள் அரசுரிமை வாய்ந்து வந்ததாகத் தெரிகிறதல்லவா! அவர்களுள் சோழராஜ்யத்தை ஆண்ட குலோத்துங்க சோழன் என்னும் அரசன் கல்வி கேள்விகளிற் சிறந்த பல புலவர்களைத் தனது சபையில் கூட்டிவைத்து ஆதரித்துத் தமிழ்ப்பாஷையை வளர்த்து வந்தான். இவ்வரசன் வடமொழியாகிய சம்ஸ்கிருதத்திலுள்ள இராமாயண காவியத்தைக் கவிச் சக்கரவர்த்தியான கம்பரைக் கொண்டு தேன்மொழி என்னும் தென் மொழியாகிய தமிழ்ப் பாஷையில் பாடல்களாகச் செய்வித்தனன்.

கம்பர் சோழநாட்டில் திருவழுந்தூர் என்ற ஓர் ஊரிலிருந்த ஒச்சன் குமாரர். இவரது இளமைப் பருவத்திலேயே இவர் தகப்பனார் இறந்தார். சிறு வயதிலேயே இவரிடம் நுண்ணறிவு, பெரியாரைப் பணிதல், கல்வி கற்க அவாவுதல் முதலிய அரிய குணங்கள் இருப்பதை அக் காலத்தில் அவ்வூருக்கருகில் இருந்த திருவெண்ணெய் நல்லூர் சடையப்ப முதலியார் என்னும் பிரபு கேள்வியுற்று, இவரையும் இவர் தாயையும் வருவித்து ஆதரித்தனர். இன்னும் முதலியாரவர்கள் கம்பருக்குக் கல்வி கற்பிக்கும் வகையில் மிக்க சிரத்தை எடுத்துக்கொண்டு, தம் புத்திரருடன் இவரையும் பள்ளிக்கனுப்பி வந்தார். கம்பர் அங்குப் பல நூல்களையும் நன்கு கற்றுத் தமது திறத்தாலும், புத்தி நுட்பத்-

தாலும் இளம் பிராயத்திலேயே கவி பாடும் வல்லமையைப் பெற்ருர்.

இவரது கவிவன்மை தமிழ் நாடெங்கும் பரவ ஆரம்பித்தது. அப்போது சோழ நாட்டில் அரசு புரிந்துவந்த குலோத்துங்க சோழன் கம்பரை முதலியாரிடமிருந்து வருவித்துத் தனது சமஸ்தான வித்துவான்களுள் ஒருவராக நியமித்தான். ஒருநாள் வடமொழி இராமாயண காவியத்தின் அருமை பெருமைகளை வடமொழிவல்லார் ஒருவர் குலோத்துங்க சோழனிடம் எடுத்துப் பேசியபோது, அத்தகைய பெருங் காவியத்தைத் தமிழில் செய்யவேண்டும் என்ற எண்ணம் அவனுக்கு உண்டாயிற்று. அவ்வெண்ணம் இராஜ சபையி லிருந்த சடையப்ப முதலியார் தூண்டுதலினல் வலுத்தது. பிறகு ஒருநாள் குலோத்துங்க சோழன் தனது சமஸ்தான வித்துவான்களுள் சிறந்து விளங்கிய கம்பரையும் ஒட்டக்கூத்தரையும் அழைத்து இவ்விருவரையும் வடமொழியிலுள்ள இராமாயணத்தைத் தமிழில் பாடுமாறு கேட்டுக்கொண்டனன். அதன்படியே இவர்களும் பாடினர். இருவர் நூல்களுள் கம்பர் பாடிய கவி, ஒட்டக்கூத்தர் பாடியதைக் காட்டிலும் சிறந்து இருந்தது. அதனல் கம்பர் பாடிய ஆறு காண்டங்களையும், ஒட்டக்கூத்தர் பாடிய ஏழாவது காண்டமாகிய உத்தர காண்டத்தையும் சேர்த்து அரசனும் அவன் சபையில் இருந்த புலவர்களும் பூர்த்தி செய்துகொண்டனர்.

இராமாயணத்தைச் சரித்திரத்தினது முக்கியமான விஷயத்தைக் குறிக்குஞ் சொற்களால், ஆறு காண்டங்களாக வகுத்தனர்.

**1. பால காண்டத்தில்** ஸ்ரீ கோதண்ட ராமனது பிறப்பு, வசிஷ்டரிடம் கல்விகற்றல், விசுவாமித்திரருடன் யாகத்திற்குச் செல்லல், சீதையினது திருமணம் முதலியன கூறப்படும்.

**2. அயோத்தியா காண்டத்தில்** கூனியின் கலகம், ஸ்ரீ கோதண்டராமன் காட்டுக்கு ஏகுதல், குகனுடன் சிநேகம், பரதன் சித்திரகூட மடைதல், பாதுகா பட்டாபிஷேகம் முதலியன கூறப்படும்.

**3. ஆரணிய காண்டத்தில்** ஸ்ரீராமன் தண்டகாரண்யம் சேர்தல், அரக்கர்களை அழித்தல், சீதாதேவி பொய்ம்மானை விரும்புதல், சீதாதேவி இராவணனால் அபகரிக்கப்படல், ஜடாயு யுத்தம் முதலியன கூறப்படும்.

**4. கிஷ்கிந்தா காண்டத்தில்** அநுமானால் சுக்ரீவனுக்கும் ஸ்ரீகோதண்டராமனுக்கும் சிநேகமாதல், வாலியின் வதை முதலியன கூறப்படும்.

**5. சுந்தர காண்டத்தில்** அனுமான் இலங்கையைச் சேர்தல், சீதாதேவியைக் காணல், கணையாழி கொடுத்தல், அசோக வனத்தை அழித்தல், ஸ்ரீராமனிடம் சீதையைக் கண்டதாகச் சொல்லுதல் முதலியன கூறப்படும்.

**6. யுத்த காண்டத்தில்** சமுத்திரத்தைக் கடக்க வாராவதி கட்டல், இராவண கும்பகர்ணாதிகளின் யுத்தம், விபீஷண இராஜ்யாபிஷேகம், சீதாதேவியின் மீட்சி, அயோத்திக்குத் திரும்புதல், ஸ்ரீகோதண்டராமனது பட்டாபிஷேகம் முதலியன கூறப்படும்.



# 1. ஸ்ரீராமர் ஜனனம்

நமது இந்தியா தேசத்தின் வட திசையில் சரயூ என்னும் திவ்விய நதிக் கரையில் உள்ள அயோத்தி என்னும் நகரம் பூர்வ காலம் முதல் மிக்க பிரசித்தி பெற்றது. அந்த நகரத்துக்கு இக் காலத்தில் ஔட் (Oudh) என்று பெயர். பல்லாயிரம் வருஷங்களுக்கு முன்னே தசரதன் என்னும் பெயருள்ள ஓர் அரசன் அங்கு அரசு செலுத்தி வந்தான். யுத்தம் செய்வதில் அவன் மிக்க சாமர்த்திய முடையவன். பகைவர் திகிலடையும்படி தனது இரதத்தைப் பத்துத் திக்கிலும் பயமில்லாது செலுத்திப் போர் செய்ய வல்லவன். ஆதலால் **தசரதன்** என அவனுக்குப் பெயர் வந்தது.

தசரதன் மிக்க பிரசித்திபெற்ற இட்சுவாகு குலத்தில் உதித்த அஜச் சக்கரவர்த்தியின் குமாரன்; மிக்க புஜபல பராக்கிரமம் பொருந்திய சுத்தவீரன்; அவன் நீதிமான். பிரஜைகளுடைய நன்மையையே முக்கியமாகக் கருதுபவன். ஆகையால் ஜனங்கள் மனப்பூர்வகமாக அவனுக்கு அடங்கி நடந்தார்கள். அரசனும், பிரஜைகளுடைய சுகமே தனது சுகமாகவும், அவர்களுடைய துக்கமே தனது துக்கமாகவும் மதித்து இராஜ்ய பரிபாலனம் செய்து வந்தான். ஜனங்களை ஆளும் விஷயத்தில் பல புத்திமான்கள் அவனுக்கு உதவி செய்தார்கள். இராஜாங்கத்துக் குரிய விஷயங்களில் சுமந்திரரைத் தலைவராகக் கொண்ட எட்டு மந்திரிமார்களும், மத சம்பந்தமான விஷயங்களில் வசிஷ்டர், வாமதேவர் என்னும் இரண்டு புரோகிதர்களும் அவனுக்கு உதவி புரிந்து வந்தார்கள்.

இப்படிப்பட்ட மகான்களுடைய ஆலோசனையின் பேரில் நடந்த அவனுடைய அரசாட்சி மிகவும் நீதியுள்ளதாக இருந்தது. ஆகையால் அவனுடைய பிரஜைகள் சந்தோஷத்தோடும், சமாதானத்தோடும் வாழ்ந்தனர். அவர்களுக்குள் சண்டை சச்சரவு கிடையாது. அவர்களுடைய வயல்கள் நன்ருக விளைந்து மிக்க பலனைக் கொடுத்தன. எல்லா வகுப்பினரும் தத்தம் கடமைகளைச் செவ்வையாக நிறைவேற்றி வந்தார்கள். ஜனங்கள் மிக்க செல்வமுடையவர்களாக இருந்தமையால் பிறர் சொத்தை அபேக்ஷிப்பவர்களும், கள்வர்களும் அவனுடைய இராஜ்யத்தில் இல்லை. அயோத்தி நகரம் கோட்டைகளாலும், சேனைகளாலும் நன்ருக அரண் செய்யப்பட் டிருந்தது. பகைவர் அஃதை எளிதில் கைப் பற்ற முடியாததாக இருந்தது. இக் காரணத்தினால் அந்த நகரத்துக்கு **அயோத்தி (ஜயிக்கக் கூடாத நகரம்)** என்று பெயர் உண்டாயிற்று.

தசரதச் சக்கரவர்த்திக்குக் கௌசலை, கைகேயி, சுமித்திரை என்ற மூன்று மனைவியர்கள் இருந்தனர். அரசனுக்கு நெடுங் காலம் புத்திரசந்தானம் இல்லாதிருந்தது. முதுமைப் பருவம் வரவே அவன் தனக்குப் பின் தன் இராஜ்யத்தை ஆளவும், தன்னுடைய வம்சத்தை நிலைநிறுத்தவும் புத்திரன் இல்லையே என்று தனக்குள்ளே சிந்திக்கலானுன். பிறகு அவன் தன் மந்திரிமாரோடும், புரோகிதர்களோடும் ஆலோசனை செய்து, மணிமந்திர ஔடதங்களாலும், தேவதாப் பிரீதியாகப் புத்திரகாமேஷ்டி யாகத்தைச் செய்வதாலும் புத்திர சந்தானத்தை அடையத் தீர்மானித்தான். தசரதன் மந்திராலோசனைச் சபையாரின் சொற்படி

தான தர்மங்கள் செய்து, யாகத்திற்கு வேண்டியனவும் சித்தம் செய்தனன்.

அங்க தேசத்தி லிருந்து இருசிகசிங்கர் என்னும் கலைக்கோட்டு முனிவரும் பின்னும் பல முனி சிரேஷ்டர்களும் யாகத்தைச் செய்விக்க வரவழைக்கலாயினர். யாகத்திற்கு வேண்டியன யாவும் சித்த மாயின. இருசிகசிங்கர் வேத விதிப்படி யாகத்தைச் செவ்வனே முடித்து வைத்து, யாகப் பிரசாதத்தைத் தசரதனுக்குக் கொடுத்தனர். அப் பிரசாதத்தைத் தசரதன் தன் பத்தினிகள் மூவர்க்கும் பகிர்ந்து கொடுத்து ஆனந்தமுற்றனன்.

காலக் கிரமத்தில் கௌசலை யிடத்தில் **இராமனும்**, கைகேயி யிடத்தில் **பரதனும்**, சுமித்திரை யிடத்தில் **இலக்குமணன், சத்துருக்கன்** என்னும் இருவரும் பிறந்தார்கள்.

இராஜகுமாரர் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து, குறு நடை நடந்து, விளையாடிப் பெற்றோர் உள்ளம் களிக்கச் செய்தனர். தக்க வயது வந்தவுடன் தசரதன் வித்தை கற்பிக்கும்படி அவர்களைத் தன் குலகுருவான வசிஷ்டரிடத்தில் ஒப்புவித்தான். அவர்கள் வேதங்களையும், வில் வித்தையையும், இன்னும் இராஜ குமாரர்கள் கற்க வேண்டிய யானை ஏற்றம், குதிரை ஏற்றம் முதலியவைகளையும் வெகு விரைவில் கற்றுக்கொண்டனர். அன்றி, அவர்கள் வில் வித்தையில் தேர்ச்சி யடைந்து இளம் வயதிலேயே ஆச்சரியமான பல செயல்களைச் செய்தனர்.



## 2. விசுவாமித்திரர் இராம லக்குமணர்களை அழைத்துச் செல்லுதல்

இராஜ குமாரர் தக்க பருவத்தை அடைந்தவுடனே தசரதன் அவர்களுக்கு விவாகம் செய்விக்க உத்தேசித்து, அதைக் குறித்து வசிஷ்டரோடு ஆலோசனை செய்துகொண் டிருந்தான். அச் சமயம் விசுவாமித்திரர் தசரதன் சபையை வந்தடைந்தார். தசரதன் விசுவாமித்திரரைக் கண்டதும் வணங்கி அவருக்குச் செய்யவேண்டிய மரியாதைகளைச் செய்த பிறகு, அவர் வந்த காரியம் என்னவென்று விசாரித்தான். மேலும் அவர் எது கேட்டாலும் கொடுப்பதாகத் தசரதன் சொன்னான். அதற்கு விசுவாமித்திரர் "நீ கொடையாளி என்று பெயர் பெற்றிருக்கிறாய். சுபாகு, மாரீசன் முதலிய அரக்கர்கள் என்னுடைய யாகத்தைக் கெடுப்பதற்குத் தங்களால் இயன்ற வரையில் முயற்சி செய்கிறார்கள். அரக்கர்களைச் சங்கரிக்கவும், யான் செய்யும் யாகத்தைக் காக்கவும் இராமனைத் தயை செய்து அனுப்ப வேண்டும். இராமன் சிறுவனென்று பயப்பட வேண்டா. அவன் அத் தொழிலை முடித்தற்குத் தகுந்தவன் என்பது எனக்குத் தெரியும்" என்றார்.

விசுவாமித்திரர் சொன்ன அவ் வார்த்தைகள் இடி விழுந்ததுபோலத் தசரதன் காதில் விழுந்தன. அவன் நெடுங்காலம் புத்திரசந்தான மில்லாதிருந்தவனாதலால் மிகச் சிறுவராக இருந்த தன்னுடைய குமாரரிடத்தில் மிக்க அன்புடையவனா யிருந்தான். அதிலும் தசரதன் தனது கண்மணியே யனைய இராமனை ஒரு கணமும் விட்டுப் பிரிய மனம் துணிய

வில்லை. ஆதலால் தானே தன் ஆயுதங்களோடும், நால்வகைச் சேனைகளோடும் சென்று விசுவாமித்திரருக்கு உதவி செய்வதாகச் சொன்னான். இதுவுமன்றி விசுவாமித்திரர் கேட்டுக் கொண்டபடி இராமனை அவருடன் அனுப்ப முடியாதென்றும் மறுத்தான்.

'எது கேட்டாலும் கொடுப்பேன்' என்று சொன்ன வாக்கை மறந்து தசரதன் இப்படிச் சொன்னவுடன் விசுவாமித்திரருக்கு மிக்க கோபமுண்டாயிற்று. வசிஷ்ட மகரிஷிக்கு விசுவாமித்திரருடைய பெருமையும் இராமனுடைய சக்தியும் நன்றாகத் தெரியும். ஆதலால் இராமனை விசுவாமித்திரரோடு அனுப்ப வேண்டுமென்றும், அதனால் இராமனுக்கு அதிக நன்மை உண்டாகுமென்றும் அவர் தசரதனுக்கு எடுத்துரைத்தார். அதன்பேரில் தசரதன் அப்படியே ஒப்புக்கொண்டு இராமனையும் அவனுடன் இலக்குமணனையும் கூட்டி விசுவாமித்திரரோடு அனுப்பினான். விசுவாமித்திரர் அயோத்தியை விட்டுப் புறப்பட்டவுடனே பலை, அதிபலை என்னும் திவ்ய மந்திரங்களை அவ்விருவர்களுக்கும் உபதேசித்தார். அம் மந்திரபலத்தினால் அவர்களுக்குப் பசியும் தாகமும் இல்லாமற் போயின. அவர்கள் காட்டுக்குள் வெகுதூரம் சென்று, கங்காநதியைக் கடந்து, தாடகை என்னும் கொடிய அரக்கி வசிக்கும் காட்டை அடைந்தனர்.

தாடகை மிக்க துஷ்ட குணமுடைய ஸ்திரீ. அவளுக்குப் பிரமாண்டமான தேகமும் நீண்டு பருத்த கைகால்களும் உண்டு. அவள் தன் இஷ்டப்படி ரூபத்தை மாற்றச் சக்தியுள்ளவள். அவளும் அவளுடைய மகன் மாரீசனும் தம் இஷ்டப்படி அந்தக் காட்டில் திரிந்து

மனிதருக்கும் மிருகங்களுக்கும் மிக்க உபத்திரவத்தை உண்டாக்கி வந்தனர்.

விசுவாமித்திர ரிடத்திலிருந்து தாடகையினது வரலாறுகளைக் கேட்டபின் அவள் மனிதரையும் மிருகங்களையும் பட்சிப்பவளாதலால் அவளைக் கொல்ல வேண்டுமென்று இராமர் தீர்மானித்தார். அவர் வில்லையெடுத்து மீட்டிச் செய்த குணத் தொனியைக் கேட்டுத் தாடகை அவ்விடத்துக்கு விரைவாக வந்து இராம லக்குமணர்மீது கற்களை வாரி எறிந்தாள். இராமர் பாணங்களை மழைபோல வருஷித்து அவற்றைத் தடுத்து மாலைப்பொழுது வரையில் அவளோடு கடுஞ் சமர் புரிந்தார். இராத்திரி காலத்தில் அரக்கர்களுக்குப் பகலிலுள்ளதைவிட அதிக பலமுண்டாகுமாதலால் அதை அப்பொழுது விசுவாமித்திரர் இராமனுக்குக் குறிப்பாகத் தெரிவித்தார். இராமன் அதை உணர்ந்து இரண்டு கூரிய பாணங்களைக் குறிதவறாது விடுத்து அவளை வீழ்த்தினன். அந்தப் பாணம் தேகத்திற் பாய்ந்ததும் அரக்கி அலறிப் பெருங்கூச்சலிட்டுப் பூமியில் வீழ்ந்து இறந்தாள். அதுகண்டு விசுவாமித்திரர் களித்து அருமையான அனேக அஸ்திர வித்தைகளை ஸ்ரீ கோதண்டராமனுக்குக் கற்றுக் கொடுத்தார்.

பிறகு இராமனும் இலக்குமணனும் விசுவாமித்திரரோடு சென்று அவருடைய ஆச்சிரமத்தை அடைந்தனர். அதற்குச் சித்தாசிரமம் என்று பெயர். அங்குச் சகோதரர் இருவரும் யாகசாலையைக் காவல் செய்ய, கவுசிகமுனிவர் தம்முடைய யாகத்தை ஆரம்பித்தார். யாகக் கிரியைகள் ஆறு நாள் வரையிலும்

யாதோர் இடையூறுமின்றி நடந்தேறின. ஏழாம் நாள் தாடகையின் புத்திரர்களான சுபாகு, மாரீசன் என்னும் இரண்டு இராக்கதர்களும் அவர்கள் கூட்டத்தாரும் அங்கு வந்து அசுத்தமான வஸ்துக்களை யாகபூமியில் எறிய யத்தனித்தனர். அப்பொழுது இராமன் கோதண்டத்தைக் கையிலேந்தி இலக்குமணனை யாகசாலையின் வாயிலில் நிறுத்தி, அதிக ஜாக்கிரதையாக யாகசாலையைச் சுற்றிவந்தனன்; அரக்கர்கள் நெருங்கியதும், மூன்று அரிய பாணங்களை அவர்கள் மீது எய்தனன். ஒரு பாணத்தினால் மாரீசன் அடிபட்டு ஓடி ஒளிந்தான். மற்ற இரண்டு பாணங்களால் சுபாகுவும் அவன் இனத்தவரும் தேகம் துளையுண்டு இறந்தார்கள். பின்னர் விசுவாமித்திரர் யாகத்தைக் கவலையின்றிச் செய்து முடித்துத் தேவர்களை மகிழ்வித்தனர்.

யாகம் இனிது முடிந்ததும் விசுவாமித்திரர் தாடகை வதத்தைப் பற்றியும், அரக்கர் அழிவைப்பற்றியும், யாகபூர்த்தியைப் பற்றியும் களிப்போடு இராஜகுமாரர்களுடன் வார்த்தையாடிக்கொண்டிருந்தார். அப்பொழுது மிதிலையின் அரசனான ஜனகமகாராஜன் செய்யும் யாகத்திற்கு வரும்படியாக விசுவாமித்திரருக்கு அழைப்புப் பத்திரம் ஒன்று வந்தது. அந்த யாகத்திற்கு இராமலக்குமணர்களையும் அழைத்துச் செல்லத் தீர்மானித்து முனிவர் இராஜ குமாரர்களுடன் மற்ற முனிவர்களும் புடைசூழ மிதிலாபுரிக்குப் புறப்பட்டனர்.

மிதிலைக்குச் செல்லும் வழியில் இவர்களுக்குக் கௌதம மகரிஷியினுடைய ஆச்சிரமம் தென்பட்டது.

அம் முனிவரது சாபத்தினுல் மனிதர் கண்ணுக்குப் புலப்படாமல் திரிந்துகொண்டிருந்த அவருடைய மனைவி அகலியை என்பாள், ஸ்ரீகோதண்டராமன் தரிசனத்தால் சாபம் நீங்கப் பெற்றுத் தன் சுயரூபத்துடன் சோபித்தாள். அகலியையும், கௌதம முனிவரும் ஸ்ரீ ராமனைத் துதித்து வாழ்த்திய பின்னர் அப் புண்ணிய புருஷனது உத்தரவு பெற்றுத் தவம் செய்ய இமயமலையைச் சார்ந்தனர்.

விசுவாமித்திரர் அவ்விடம் நீங்கி முனிவர் கூட்டத்துடன் சக்கரவர்த்தித் திருமகனையும், இளைய பெருமாளையும் அழைத்துக் கொண்டு முன் நடந்தனர். வழியில் கண்ணுக்குப் புலப்பட்ட ஒவ்வொரு க்ஷேத்திரத்தின் மகிமையையும் அங்குப் பாயும் கங்கா நதி முதலியவற்றின் பெருமையையும் முனிவர் எடுத்துச் சொல்லி வழி நடையின் சிரமம் இராஜ குமாரர்களுக்குத் தோற்ருதபடி செய்து சீக்கிரத்தில் மிதிலா நகரத்தை வந்தடைந்தார்.



## 3. சீதையின் திருமணம்

மிதிலா நகரத்து அரசனுன ஜனகமகாராஜன் கல்வி கேள்விகளிற் சிறந்து ஒழுக்க முடையவனுக இருந்தான். அவன் அரிய பெரிய வேள்வி யொன்றைச் செய்ய உத்தேசித்து முனிவர் பலர்க்குச் சுப ஓலை விடுத்தா னென்று சொன்னேே மல்லவா? அந்த யாகத்திற்கு முனிவர் பலர் வந்திருந்தனர். மிதிலா நகரத்திற்கு அருகே அமைத்திருந்த யாகசாலையும் அதைச் சூழ்ந்த இடமும் மிகவும் அழகாக அலங்கரிக்கப்பட் டிருந்தன. இத்தகைய சந்தர்ப்பத்தில் விசுவாமித்திர முனிவருடன் தசரதச் சக்கரவர்த்தியின் திருக்குமாரர்கள் யாகத்திற்கு வருகின்றனர் என்று கேள்வியுற்று ஜனகன் அவர்களைச் சகல இராஜோபசாரத்துடனும் எதிர்சென்று அழைத்துத் தக்க விடுதியில் இருக்கச் செய்தனன்.

அரசன் விருப்பத்தின்படி சுபவோரையில் சதாநந்தமுனிவர் யாகத்தை ஆரம்பித்துக் குறித்த நாட்களுக்குள் யாகத்தைப் பூர்த்தி செய்தனர். யாகம் பூர்த்தியானதும் விசுவாமித்திரர் ஜனகமகாராசனுடன் சீதையின் கல்யாண விஷயமாகப் பேசினர். அப்போது அரசன தன் புதல்வி ஜானகியை மணக்க விரும்புபவன் தேவர்களின் மூலமாகத் தனது மூதாதைகளுக்குக் கிடைத்த அரியதோர் வில்லை எடுத்து வளைத்து நாணேற்ற வேண்டும்; அதுவே தனது நிபந்தனை என்றனன். அதைக் கேட்ட விசுவாமித்திர முனிவர் தசரதன் சபையிலிருந்து புறப்பட்டு மிதிலா நகரம் வந்து சேரும்வரையில் ஸ்ரீ கோதண்டராமனது புஜபல பராக்கிரமத்தால் நடந்த பற்பல வீர தீர காரியங்களை

யெல்லாம் ஜனசனுக்கு விவரமாக எடுத்துச் சொல்லினர். பின்னும் அவ் வில்லேயும் அவ்விடத்தே வரவழைக்கச் செய்தனர். அவ் வில் அதிக பருமனும் கனமும் உள்ளது. நமது இரகுவீரன் முனிவரின் ஆஞ்ஞை பெற்று அவ் வில்லே அனுயாசமாக இடக்கையா லெடுத்து நிறுத்தி வளேத்து வலக் கையால் நாணே இழுத்து வில்லின் மறுமுனேயில் பூட்ட யத்தனித்தனன். அப்போது எல்லார் காதும் செவிடுபட அவ்வில்லானது படீர் என்னும் சப்தத்துடன் ஒடிந்து இரண்டு துண்டாக விழுந்தது. இவ்வாச்சரியத்தைக் கண்ட முனிவர்சளும், அரசர்களும் அச்சமும் ஆனந்தமு மடைந்தனர். ஜனகமகாராசன் மிக்க சந்தோஷமடைந்து வில்லே வளேத்த வீரனே ஜானகியைப் பெற்ருன் என்று இயம்பினன்.

உடனே ஜனகன் விசுவாமித்திரரின் அநுமதி பெற்று, வில்லே ஒடித்த விசேஷத்தைத் தூதுவர் மூலமாக அயோத்திக்கு அதிபதியான தசரதச் சக்கரவர்த்திக்குத் தெரியப்படுத்தினுன். பின்னர் நிபந்தனேயின்படி தன் குமாரத்தி சீதையை ஸ்ரீராமச்சந்திரனுக்குப் பாணிக்கிரகணம் செய்விக்க வேண்டிய ஆவசியகத்தையும் சக்கரவர்த்தி அறியும்படி செய்து சக்கரவர்த்தியையும் அவர் குடும்பத்தவரையும் அழைத்து வரும்படி மிதிலேயரசன் ஏற்பாடு செய்தான்.

தூதுவர்களேத் தசரதன் வெகு மரியாதையாக நல்வரவேற்று அவர்கள் சொன்ன சமாசாரத்தைக் கேட்டுச் சந்தோஷ மடைந்தான். தசரதன், தனது பத்தினிகள், பரத சத்துருக்கனர், மந்திரி, குரு, பிரதானிகள் முதலியவர்களோடும், இரத கஜ துரக

பதாதிகளோடும் பல திவ்யியாபாணங்களை எடுத்துக் கொண்டு மிதிலா நகரை நோக்கிப் புறப்பட்டான்.

மிதிலாபுரியில் ஆனந்தமும், குதூகலமும் குடி கொண்டிருந்தன. எங்குப் பார்த்தாலும் மகர தோரணங்களும், பூர்ண கும்பங்களும் வைத்துத் தேவேந்திரலோகம் என்பது இது தானோ என்னும்படி அலங்கரிக்கப் பெற்றிருந்தது. விவாகத்திற்கு வேண்டிய எல்லாச் சாமக்கிரியைகளும் சேகரிக்கப்பட்டன. அப்போது தசரதச் சக்கரவர்த்தி குடும்ப சமேதராக விவாகத்திற்கு எழுந்தருளுகின்றார் என்றதை ஜனகமகாராஜன் கேள்வியுற்றுத் தன்னுடனடைந்த சக்கரவர்த்தியை நல்வரவேற்று உபசரித்தான்; யோகக்ஷேமங்களை விசாரித்தான்; பிறகு சீதைக்கும் இராமனுக்கும் விவாகச் சடங்குகள் ஆரம்பிக்க உத்தரவுதர வேண்டுமென்று தசரதனைக் கேட்டுக் கொண்டான். தசரதன் மகிழ்வுடன் சம்மதிக்கவே இதனுடன் ஜனகன் தன்னுடைய இரண்டாவது புத்திரியாகிய ஊர்மிளையை இலக்குமணனுக்கும், அவன் சகோதரன் குசத்துவஜன் புதல்விகளாகிய மாண்டவியையும், சுருத கீர்த்தியையும் முறையே பரத சத்துருக்கனருக்கும் விவாகம் செய்யத் தீர்மானித்தான்.

திருமணத்திற்கெனக் குறித்த சுபலக்கினத்தில் வேதங்களை நன்குணர்ந்த வசிஷ்டர் விவாகங்களைக் கிரமமாக நடத்தினர். சமஸ்த ஜனங்களும் இவ் வைபவங்களைக் கண்ணாரக் கண்டு வயிறார உண்டு சீதாராமனை மனமார வாழ்த்தினர். ஏழைக்குடிகளுக்குப் பல தான தருமங்கள் ஏராளமாகச் செய்யப்பட்டன. விவாகத்திற்கென வரவழைக்கப்பட்ட முனிவர்களும், அரசர்களும்,

மற்றையோர்களும் தம்பதிகளை ஆசீர்வதித்துச் சென்றனர். விசுவாமித்திர முனிவர் வதூவரர்களை வாழ்த்தி ஜனகரிடத்திலும், தசரதரிடத்திலும் விடைபெற்றுக் கொண்டு இமயமலைச் சாரலை அடைந்தார்.

தசரதச் சக்கரவர்த்தி மணமக்களுடன் சில நாட்கள் ஜனகன் மாளிகையில் மகிழ்வுடன் மணவிருந்துண்டு இருந்தனர். பிறகு ஜனகன் தன் பெண்களுக்கு அளித்த சீதனங்கள் யாவற்றையும் சந்தோஷமாகப் பெற்றுக்கொண்டு தசரதன் முதல் எல்லாரும் அயோத்தி நகர் நாடிப் புறப்பட்டார்கள். அப்படிப் புறப்பட்டுப் போகும் வழியில் க்ஷத்திரியர்களின் ஜன்ம விரோதியும் பிருகு வம்சத்தில் உதித்த பிராமணோத்தமருமான பரசுராமர் ஜடாமுடி தரித்தவராய் மின்னற் கொடிபோன்ற வில்லை ஒரு கையிலும், சத்துருக்கள் கண்டு நடுங்கும் பரசு (கோடாலி) ஆயுதத்தை மற்றொரு கையிலும் ஏந்திக்கொண்டு இவர்கள் எதிரில் தோன்றினர். அவரைக் கண்டதும் தசரதன் நடுநடுங்கி என்ன செய்வது என்று தோன்றாமல் திகைத்து நின்றான். அப்போது பரசுராமர் ஸ்ரீகோதண்ட ராமனை அணுகி, 'ஏ ராமா! நீ ஜனகன்வசம் உளுத்து முறிந்திருந்த வில்லை உடைத்ததனால் பலவானென நினையாதே. நீ க்ஷத்திரிய வீரனானால் இதோ என்னிடத்திலுள்ள இவ்வரிய வில்லை வளைத்துப் பார். இல்லையேல் நீ எனக்குத் தோற்றவனாவாய்' என்றனர். இதைக் கேட்ட சீதாகாந்தன் பரசுராமரைப் பார்த்துப் புன்னகை பூத்து, 'பிராமணோத்தமரே! எனது பராக்கிரமத்தையும் பலத்தையும் நீங்கள் இப்போது நேரில் பார்க்கலாம்'

என்று சொல்லி, அவரிடமிருந்த வில்லை வாங்கி அலட்சியமாக வளைத்து நாணேற்றினர். அதைக் கண்டு பரசுராமர் மவுனமாகச் சற்று நேரம் நின்று, பிறகு தம் தபோபலத்தை எல்லாம் ஸ்ரீகோதண்ட ராமனுக்கு அளித்து விடை பெற்றுத் தவம் செய்ய மகேந்திர கிரிக்குச் சென்றார்.

பின்னர்ச் சக்கரவர்த்தியும் அவர்தம் திருக் குமாரர்களும், இராணிமார்களும், மற்றுமுள்ள பரிஜனங்களும் சுகமாக அயோத்தியை அடைந்தார்கள். அங்கு வெகு குதூகலத்துடன் ஜனங்கள் பலர் கூடி வரவேற்று மங்கல வாத்தியங்கள் முழங்க மணமக்களை அரசன் அரண்மனைக்குள் அழைத்துச் சென்றனர். இன்னும் கல்யாண ராமனுக்கு ஆர்த்திகள் பல சுற்றிக் கண்ணேறு கழித்தனர். அயோத்தியை அடைந்த சில நாட்களுக்குப் பிறகு கைகேயியின் சகோதரனை யுதாஜித்து தன்து சகோதரியின் புதல்வனை பரதனுடன் சத்துருக்கனனையும், அவர்கள் பத்தினிகளுடன், கேகய தேசம் அழைத்துச் சென்றான்.

ஸ்ரீராமச்சந்திரனும் சீதாதேவியும் ஆவின் கொம்புகளைப்போல ஒத்த அன்பினர்களாக அரண்மனையில் மகிழ்ந்திருந்தனர்.



## 4. இராமன் வனம் புகுதல்

தசரதச் சக்கரவர்த்தி முதுமைப் பருவத்தை யடைந்து இராச்சிய விஷயங்களை நடத்தச் சக்தியற்றவனுனன். அதனுல், தசரதன் தான் மிகவும் அன்புடன் நேசித்து வந்த மூத்த குமாரனுகிய இராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்து அவனை அரசனுக்க வேண்டுமென்று விரும்பினுன். இராமனிடத்திலிருந்த சிறந்த குணங்களைக் கண்டு ஜனங்களும் அவனை அன்புடன் நேசித்து வந்தனர். தசரதன் ஒருநாள் தன்னுடைய மந்திரி குரு முதலியவரோடு ஆலோசித்து இராமனுக்கு இளவரசுப் பட்டம் கட்டவேண்டுமென்று தீர்மானித்தான். பொதுஜன அபிப்பிராயத்தை அறியும்படியாக அவன் தன் இராச்சியத்திலுள்ள ஜனங்களையும் இராஜகுமாரர்களையும் வரவழைத்து ஒரு பெரிய சபை கூட்டினுன்.

அப்போது தசரதன் சபையாரைப் பார்த்து, 'முனிவர்களே! இராஜகுமாரர்களே! நகரமாந்தர்களே! நான் வயதில் முதிர்ந்தவனுகி விட்டேன் என்பது உங்களுக்குத் தெரியும். இராச்சியபாரத்தை நீக்கிவிட்டு என் பிற்கால ஜீவியத்தை அமைதியாகவும் சமாதானமாகவும் கழிக்க நான் இப்பொழுது விரும்புகிறேன். எனது மூத்த புதல்வனுகிய இராமன் எனக்குப் பின் அரசாளும்படி அவனுக்கு முடி சூட்டுவது என் அன்புள்ள பிரஜைகளாகிய உங்களுக்குச் சந்தோஷமாயிருக்குமென்று நினைக்கிறேன். இராமன் எல்லாவற்றிற்கும் மேலாக உண்மையையும் கடமையையும் விரும்புகிறவனென்பதும் அதனுல் இராஜபதவிக்குத்

தகுந்தவ னென்பதும் உங்களுக்குத் தெரியும். ஆகை யால் இந்த விஷயத்தில் உங்கள் அபிப்பிராய மென்ன வென்று தெரிவிக்கக் கோருகிறேன்' என்று கூறினன். அதற்கு அரசிளங் குமரர்களும், ஜனங்களும் ஒருமித்த மனத்தினர்களாய்த் தங்கள் அபிப்பிராயத்தை வசிஷ்ட முனிவரின் மூலமாகப் பின் வருமாறு தெரிவித்தனர்:

'சக்கரவர்த்தி! தங்கள் திருக் குமாராகிய ஸ்ரீராமருக்கு இளவரசுப்பட்டம் கட்ட எங்கள் அநு மதி கேட்பது, கரும்பு தின்னக் கூலி கேட்டதுபோ லாகும். **ஸ்ரீரகுநாதன்** உத்தம புருஷன், உண்மையே பேசுபவன்; தருமத்தில் நோக்கமுள்ளவன்; பொறு மையில் பூமிதேவியைப் போன்றவன்; குற்றஞ் செய் தவரிடத்தும் பிரியமாகப் பேசும் சுபாவமுள்ளவன்; பிறர் செய்த உபகாரம் சொற்பமானுலும் அதை அதிகமாக நினைப்பவன்; கெட்ட விஷயங்களில் ஆசை யில்லாதவன்; அண்டினவரை ஆதரிக்கும் அருங்குண முடையவன்; தன்னிடம் பிறர் அசூயை வைத்தாலும் அதை லட்சியஞ் செய்யாதவன்; சத்துருக்களை ஜயிக்கும் சாமர்த்திய முள்ளவன்; இன்னும் இவை போன்ற அரிய குணங்கள் பல மேன்மேலும் அவனிடத்தில் விருத்தி யடைகின்றன. அன்றியும் ஸ்ரீராமன் உமது புதல்வர்களில் மூத்தவன் ஆகலின் இத்தகைய வீரனை நாங்கள் இளவரசாகப் பெறுவது நாங்கள் செய்த பாக்கியமே. ஆதலால் உங்களுக் கிருப்பதுபோலவே எங்களுக்கும் ஆசையுண்டு. மகா ராசரே! இதைச் சிக்கிரத்தில் பூர்த்தி செய்க' என்று அதிக ஆநந்தத்துடன் பிரஜைகள் தங்கள் சம்மதத் தைத் தெரிவித்தனர்.

பட்டாபிஷேகதினம் குறிப்பிடப்பட்டது. தேசத்திலுள்ள சிற்றரசர்களும் பிரதானிகளும் பட்டாபிஷேக மகோற்சவத்திற்கு வரவழைக்கப் பட்டனர். அயோத்தி நகரம் கொடிகளாலும் மகரதோரணங்களாலும் அலங்கரிக்கப் பட்டது. நகரம் முழுவதும் இராமனுடைய பட்டாபிஷேகத்தைக் குறித்துக் குதூகலமடைந்தது. ஆயினும் இக்காட்சிகளனைத்தும் சீக்கிரத்தில் மாறின.

கேகயதேசத்து அரசனாகிய அசுவபதியின் புத்திரி கைகேயி தசரதனுடைய மனைவியரில் இளையவள். அவளிடத்தில் தசரதனுக்கு மிக்க பிரீதி உண்டு. உண்மையில் அவளுக்குத் தன் புத்திரன் பரதனைவிட இராமனிடம் பிரியம் அதிகம். இனி நடக்கும் பட்டாபிஷேகத்தைக் குறித்து அவளும் வெகு சந்தோஷமடைந்திருந்தாள்.

கைகேயிக்கு வயதில் முதிர்ந்த மந்தரை என்னும் தோழி ஒருத்தி இருந்தாள். இவள் கைகேயிக்குப் பல தீய விஷயங்களைச் சொல்லி அவள் மனத்தை மாற்ற முயன்றாள். இதற்குக் காரணம் ஸ்ரீராமன் சிறுவனாக இருந்த பொழுது, இத் தோழி மந்தரையின் கூன் முதுகைக் குறி வைத்து மண் உருண்டைகளை விளையாட்டு வில்லால் எய்து ஆனந்திப்பது வழக்கம். அந்த விளையாட்டு இப்போது வினையாயிற்று. கைகேயியை நோக்கி மந்தரை, 'என் அன்புக்குரிய இராணியே! நீ இந் நகரில் செய்யப்படும் அலங்காரங்களைக் காணவில்லையா? இராமனுக்குப் பட்டாபிஷேகம் நடக்கப்போகிறது. அப்படியிருந்தும் உன்னுடைய அறியாமையைக் குறித்து நான்

ஆச்சரியப் படுகிறேன்' என்ருள். அதற்கு இராணி, 'நீ ஏன் ஆச்சரியப்பட வேண்டும்? மற்றச் சகோதரர் களைவிட இராமனுக்கே பட்டாபிஷேகம் செய்வது கிரமம். அவனே ஜேஷ்டன்; மேலும் மற்றவர்கள் எல்லாரிலும் அவனே உத்தமன்' என்ருள். அதற்கு மந்தரை, 'இல்லை! இல்லை! அப்படிச் செய்வது உன் கௌரவம் அழிவதற்குக் காரணமாகும். கௌசலைக்கு அரசனுடைய தாய் என்னும் விசேஷ அந்தஸ்து உண் டாகும்; எல்லாம் அவள் இஷ்டப்படியே ஆகும். பரதன் இராமனுக்குப் பணியாள் ஆவான். அவனுக்கு அதற்குக் குறைந்த அந்தஸ்து ஏற்பட்டாலும் ஏற்பட லாம். இராமன் ஒருவேளை பரதனை இராச்சியத்தை விட்டு நீக்கி விட்டாலும் விடலாம். கௌசலை உனக்கு எசமாட்டி ஆவாள்' என்ருள்.

எண்ணற ஓதி எழுத்தற வாசித்திருந்தாலும் கைகேயியும் பெண்பிள்ளை தானே. மந்தரையினது தந்திரமான வார்த்தைகள் அவளுக்குக் கர்வத்தை உண்டாக்கி, கௌசலையிடத்தில் பொருமை கொள்ளும் படி செய்தன. இராமனுடைய பட்டாபிஷேகத்திற் காகச் செய்யப்படும் பிரயத்தனங்களைப் பார்த்துக் கொண்டு பொறுமையா யிருக்க இனிமேல் அவளால் ஆகவில்லை. இராமனைக் காட்டுக்கு அனுப்பிவிட்டுத் தன்னுடைய மகன் பரதனுக்கு முடிசூட்ட வேண்டு மென்று அவள் தீர்மானித்தாள். தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நடந்த யுத்தத்தில் தசரதனுடைய பிராணனைக் காப்பாற்றினதற்காகக் கைகேயிக்கு இரண்டு வரங்களைக் கொடுப்பேனென்று தசரதன் வாக்களித்ததை அச் சமயம் மந்தரை கைகேயிக்கு

ஞாபகப் படுத்தினுள். இதைக் கேட்ட கைகேயி இழந்த தனத்தை மறுபடியும் பெற்றவள்போலச் சந்தோஷித்து இராமனைக் காட்டுக்கு அனுப்பவும், பரதனுக்கு முடிசூட்டவும் ஆக இரண்டு வரங்களையும் தசாதனிடம் பெற உறுதிகொண்டாள்.

மறுநாள் நடக்கும் பட்டாபிஷேகத்தைப் பற்றிச் சொல்லுவதற்காகத் தசாதன் தன் அன்பிற்குரிய அரசியின் அந்தப்புரத்துக்கு வந்தான். அந்தோ, அவன் என்ன கண்டான்! தன் பிரியை நிலத்தில் அலங்கோலமாக விழுந்து கண்ணீர் சொரியக் கண்டான். அவள் அவனிடத்தில் ஒரு வார்த்தையும் பேசவில்லை. தசாதனுக்கு மிக்க விசனமுண்டாயிற்று. அவன் அவளுடைய துக்கத்தைப் பலவிதமான இத வார்த்தைகளால் ஆற்றப் பிரயாசைப் பட்டான், ஒன்றும் பயன்படவில்லை. கைகேயி கள்ளக் கண்ணீர் விட்டதனுல் தசாதன் அவளுடைய வஞ்சனையை அறியாதவனுனன். அவள் அவனைப் பார்த்து, 'நாதா! ஒரு காலத்தில் தாங்கள் கொடுப்பதாக வாக்களித்த இரண்டு வரங்களை இப்பொழுது எனக்குக் கொடுக்க வேண்டும். அப்படிக் கொடுத்தால்தான் எப்பொழுதும்போலச் சந்தோஷத்துடன் இருப்பேன்' என்றுள். அவளுடைய கண்ணீரை மாற்ற எதை வேண்டுமானுலும் செய்யச் சித்தமாயிருந்த தசாதன், 'கைகேயீ! அவ் வரங்களை இப்போதே கேள், தடையின்றிக் கொடுக்கின்றேன்' என்றுன். அவ்வாக்குறுதியின் பேரில் கொண்ட கருத்துக் கைகூடுமென்று தேறினவளாகிக் கைகேயி எழுந்து உட்கார்ந்து, 'அரசே! இரண்டு வரங்கள் யாவையெனின்: இராமன் மரவுரி உடுத்துப் பதினுன்கு வருடம்

வனவாசம் செய்வது ஒன்று, இராமனுக்குப் பதிலாகப் பரதனுக்கு முடி சூட்டுவது மற்றொன்று' என்றாள். இராணி சொன்ன இந்த வார்த்தைகள் தசரதனுடைய மார்பில் ஈட்டியால் குத்தினதுபோல் இருந்தன. உடனே அவன் மூர்ச்சையாகிக் கீழே விழுந்தான்; மூர்ச்சை தெளிந்தபின் இவ்விரண்டுந் தவிர வேறு வரங்களைக் கேட்கும்படி கைகேயியை வேண்டினான். மனம் வேறு பட்ட கைகேயியோ வேறு வரங்களைக் கேட்க மாட்டே னென்று மறுத்து, 'நீர் சொன்ன சொல் தவறுதவர். நீர் கொடுத்த வாக்கை மறுப்பீரானால் என் உயிரை விடச் சித்தமா யிருக்கிறேன்' என்றாள். அச் சமயம் தான் எதிர்ப்பாராத அவ் வன்மொழிகளைக் கேட்டுத் தசரதன் நடுக்குற்றுப் பதில் சொல்லச் சக்தியற்றவனாய், அவள் சொற்படி செய்வதன்றி வேறு வழி இல்லாது தன் படுக்கையில் சாய்ந்தான்.

மறுநாள் பட்டாபிஷேகத்துக்கு வேண்டியன யாவும் சித்தமாயின. தசரதன் மூர்ச்சையாகிக் கைகேயி யின் அந்தப்புரத்தில் இருந்தமையால் பட்டாபிஷேக மண்டபத்திற்கு வரவில்லை. வெகுநேரம் காத்திருந்தும் அரசன் வாராதது கண்டு காரணம் கண்டுகொள்ளச் சபையோர் சுமந்திரரை அனுப்பினார்கள். சுமந்திரர் கைகேயியின் அந்தப்புரம் சென்று தசரதன் மூர்ச் சையாகிச் சாய்ந்திருப்பதைக் கண்டார். அப்போது கைகேயி, இராமனைத் தன்னிடத்திற்கு அனுப்பும்படி சுமந்திரரிடத்தில் சொன்னாள். இராமன் இச் சமயத் தில் சர்வாலங்காரத்துடன் பட்டாபிஷேக மண்டபத் திற்குச் செல்லச் சித்தமா யிருந்தான். அவ்விடம்

வந்த சுமந்திரர் கைகேயி இளவரசரைத் தன்னிடம் வரச் சொன்னதைத் தெரிவித்தார். பட்டாபிஷேக சம்பந்தமாக ஏதோ சொல்லப்போகிறு ளென்று எண்ணித் **தசரத ராமன்** கைகேயியினுடைய அந்தப்புரத்துக்கு விரைந்து சென்ருன்.

இராணியின் அறைக்குள் இராமன் சென்றதும் தசரதர் மூர்ச்சையாகி மஞ்சத்தில் சாய்ந்திருப்பதைக் கண்டு திடுக்கிட்டான். அப்போது கைகேயி தசரதர் ஏதோ சொல்ல உத்தேசித்திருப்பதாகவும், இராமன் அவ் வார்த்தைப்படி நடப்பனோவென்று அவர் சந்தேகிப்பதாகவும் இராமனிடத்தில் சொன்னுள். இராமன், தான் பெற்ருேருக்குக் கீழ்ப்படிவதைக் குறித்து உண்டான சந்தேகத்திற்காக மிக்க விசனமுற்ருன். தன் தகப்பனுருடைய விருப்பம் தனக்கு எவ்வளவு விரோதமாக இருந்தபோதிலும் அதை நிறைவேற்றுவதாகச் சிறிதும் யோசியாது விடை யளித்தான். அவ்வுறுதி மொழியைக் கேட்ட கைகேயி, 'ஏ! இராமா! நீ பதினன்கு வருடம் வனவாசம் செய்யவேண்டு மென்பதும், உன்னுடைய ஸ்தானத்தில் பரதனுக்கு முடி சூட்ட வேண்டு மென்பதும் உன் தகப்பனுருடைய அபிப்பிராயம்' என்ருள்.

பெற்ருேருக்குக் கீழ்ப்படிதலே மத சம்பந்தமான விதிகளிலும் மேலாக மதிப்பது இராமனுடைய வழக்கம். ஆகையால், கைகேயி சொன்ன வார்த்தைகளைக் கேட்டு இராமன், 'அம்மா! ஓர் இராச்சியத்தைக் கைப்பற்றிப் பிரஜைகளை நீதியாக ஆள்வது மிகவும் கஷ்டமான விஷயம். அவ்வித கஷ்டத்திலிருந்து நான்

விடுதலை யடைந்ததற்காக மிகவும் சந்தோஷப்படுகிறேன். நான் வேறு எதைச் செய்தாலும் செய்வேன். என் தகப்பனார் திருவாக்குச்கு எதிர்வாக்குச் சொல்ல மாட்டேன். இதோ, அவர் இஷ்டப்பிரகாரம் நான் காட்டுக்குச் செல்கின்றேன். என் தம்பி பரதனே இராச்சியத்தை ஆளட்டும்' என்று சொல்லிக் கைகேயியிடம் விடை பெற்றுச் சென்றான்.

பிறகு இராமர் தம்முடைய தாய் கௌசலையுடைய அரண்மனைக்குச் சென்று நடந்த விஷயங்களைச் சொன்னார். அதைக் கேட்ட கௌசலையும், சிற்றன்னையாகிய சுமித்திரை முதலிய யாவரும் மிகவும் விசனப்பட்டார்கள். பிதாவினுடைய வார்த்தையைப் பரிபாலிப்பதே தமது முக்கிய கடமை என்றும், சந்தோஷமாகக் காட்டுக்குச் சென்று திரும்பி வருவது நிச்சயமென்றும் சொல்லி இராமர், அவர்களைத் தேற்றி, தனிமையாய்க் காட்டுச்குச் செல்லப் புறப்பட்டார். இலக்ஷ்மணனும், சீதையும் இராமரைப் பிரிந்திருக்க மாட்டோமென்று சொல்லி அவரோடு காட்டுக்குச் செல்லப் பிரயாண மாயினர். அதனால் இராமர் அவர்க ளிருவரையும் உடனழைத்துச் செல்ல வேண்டிய தாயிற்று.

இரதம் சித்த மாயிற்று. இராமர் அன்றைக்கே காட்டுக்குச் செல்ல வேண்டு மென்பது கைகேயியினுடைய கட்டளை. ஆகையால் இராமர், இலக்ஷ்மணர், சீதை ஆகிய மூவரும் சுமந்திரரோடு அத்தினமே பொழுது சாயு முன் காட்டுக்குப் புறப்பட்டார்கள். நகரத்து ஜனங்கள் பலரும் அவர்களோடு வெகுதூரம் சென்று, அவர்களைப் பிரிய மனமில்லாதவர்களாய் வெகு விசனத்துடன் திரும்ப நேரிட்டது.

இராம லக்ஷ்மணர்களும், சீதையும் வெகு தூரம் பிரயாணம் செய்து அஸ்தமன காலத்தில் தமசை நதி தீரத்தை அடைந்து இராப் பொழுது அங்குத் தங்கினார்கள். மறு நாள் காலை மறுபடியும் அவர்கள் இரதம் ஊர்ந்து பிரயாணமாகி, அன்று அந்தி நேரத்தில் கங்கைக் கரையை அடைந்தனர். அந்தப் பிரதேசம் கிராதர்களுக்கு அரசனான **குகன்** என்பவனுடைய அதிகாரத்துக்குட்பட்டது. கிராதர்கள் கங்கை நதியில் படவு செலுத்தி ஜீவனம் செய்யும் தொழிலையுடையவர்கள். குகன் சத்தியவான், நன்னடக்கையுள்ளவன்; இராமனிடத்தில் இடையறா அன்பும், மிக்க பக்தியுமுடையவன். அவன் இராமரைக் கண்டதும் தாயைக் கண்ட சேயைப் போல ஓடிப் பூமியில் விழுந்து பணிந்து அவரைச் சேவித்து அன்புடன் உபசரித்தான். அதனால் இராமரும், அவரைச் சேர்ந்தவரும் அன்று இராத்திரி அவனோடு தங்கினார்கள். மறு நாள் உதயத்தில் இராமர் தம்முடன் வந்த சுமந்திரரையும், இரதத்தையும் அயோத்திக்குத் திருப்பி அனுப்பிவிட்டார். சுமந்திரர் மிக்க விசனத்தோடு இராமரிடத்தில் பிரியா விடை பெற்று அயோத்திக்கு மீண்டார். பிறகு குகன் செலுத்திய ஓடத்திலேறி இலக்ஷ்மணனோடும், சீதையோடும் கங்கை நதியைக் கடந்து, பின்னும் இரண்டு நாள் பிரயாணம் செய்த பின்னர் இராமர் இரவில் பாரத்துவாஜ மகரிஷியினது ஆச்சிரமத்தை அடைந்தார்.



## 5. ஸ்ரீ ராமன் சித்திரகூடம் சேர்தல்

முனி சிரேஷ்டரான பரத்துவாஜ மகரிஷி இராம, லக்ஷ்மணர், சீதை மூவரையும் மிக்க அன்புடன் நல் வரவேற்றுத் தேன், பழம், ஜலம் முதலியவைகளை அவர்கள் உண்ணும்படி கொடுத்தனர். இராமர் அவை களைச் சந்தோஷமாக உட்கொண்டு அன்றிரவை மக ரிஷியோடு கழித்தார். இராமர் சில காலம் அவ்விடத் திலேயே தங்கி யிருக்கலா மென்று பரத்துவாஜர் குறிப்பாகத் தெரிவித்தனர். வன வாசம் செய்யப் புறப்பட்ட இராமருக்கு முனிவருடன் தங்குவது யுக்தமாகத் தோன்றவில்லை. மனித சஞ்சார மில்லாத தனிமையான இடத்தில் வசிக்க வேண்டு மென்பது பிதுர் வாக்கிய பரிபாலகரான ஸ்ரீராமப் பிரபுவின் எண்ணம். ஆதலால், அப்படிப்பட்டதோர் இடத்தை நாடிச் செல்ல வேண்டுமென்று இராமர் மகரிஷிக்குத் தெரிவித்தார்.

பரத்துவாஜர், கோதண்டராமன் கருத்தை உணர்ந்து, சமீபத்தில் யமுனா நதியின் தென் கரையில் ஒரு ஸ்தானத்தைக் குறிப்பிட்டு, 'ஜானகீ ரமணா! அந்த ஸ்தானம் வெகு ரமணீயமாயிருக்கும். அதற்குச் சித்திரகூட மென்று பெயர். அங்கே தபோதனர் பலர் வசிக்கின்றனர். அதுவே நீங்கள் தங்குவதற்குத் தக்க இடம்' என மொழிந்தார். இது கேட்டதும் யமுனையைக் கடப்பதற்கு இலக்ஷ்மணன் நுண்ணிய மாக் கொம்புகளாலும், செடி கொடிகளாலும் அழகிய தோர் ஓட மொன் றியற்றினன். அதில் இரகு நாயகனும், சீதா தேவியும் உட்காருவதற் கேற்ற

ஆசனமொன்றையும் அவன் அமைத்தனன். இவ்வித மாக அமைத்த ஓடத்தால் இவர்கள் யமுனை யாற்றைக் கடந்து அதன் தென் கரையோரமாகப் பிரயாணம் செய்து பரத்துவாஜர் குறிப்பிட்ட சித்திரகூட பர்வ தத்தை அடைந்தனர். இங்கே உத்தம சகோதரரான இலக்ஷ்மணர் மரக் கொம்புகளாலும், இலைகளாலும், தழைகளாலும் வெகு சீக்கிரத்தில் ஓர் ஆச்சிரமத்தை அமைத்தார். அவ்விடத்தில் நெடுநாள் தங்கவேண்டு மென்னும் எண்ணத்துடன் அவர்கள் அந்த ஆச்சிர மத்தில் அரண்மனையில் வசிப்பதேபோல் நிர்மலமான மனத்துடன் இருந்தார்கள்.

இவர்கள் இங்கே இப்படி யிருக்க, அயோத்தி நகரில், வயதில் முதிர்ந்த தசரதன் இராமன் தன்னை விட்டுப் பிரிந்த மனோ வியாகுலத்தால் நாளுக்கு நாள் பலம் குறைந்து துக்கமென்னும் ஆழ் கடலில் மூழ்கிக் கரையேற வழியறியாதிருந்தான்.

சீதாபதி தன்னைப் பிரிந்த ஆறும் நாள் தசரதன் மண்ணுலகை நீத்து விண்ணுலக மடைந்தனன். அதனால் குடிகள் யாவரும், இராமனைப் பிரிந்த தன்றி, தசரதன் இறந்ததை எண்ணி மிகவும் அயர்ந்தனர். அயோத்தி நகரம் அப்போ திருந்த நிலைமையைச் சொல்ல இயலாது. அரசன் இறந்ததற்குக் காரணம் கைகேயியும், அவளுடைய பேராசையுமே யென்று உணர்ந்து பிரஜைகள் அவளைப் பலவாறு நிந்தித்தனர். இஃது இவ்வாறாக, அவர்களுக்கு ஓர் அரசன் வேண் டியது அவசியமாகத் தோன்றிற்று. ஆகையால், இராம ருடைய தம்பியும், வயதில் அவருக்கு அடுத்தவனும், மிக்க புத்திமானுமாகிய பரதனை இப்போது அரசனுக்க

வேண்டுமென்று அவர்கள் மந்திரிமாரைக் கேட்டுக் கொண்டார்கள். மந்திரிகளும் அப்படியே செய்ய ஒப்புக்கொண்டனர்.

அச் சமயத்தில் பரதன் அவனுடைய பாட்டனுராகிய அசுவபதியோடு கேகய நாட்டில் வாசம் செய்து கொண்டிருந்தான். அவனை அழைத்துக்கொண்டுவரும்படி தூதுவர் குதிரைகளின்மீது ஏறி வாயுவேகமாகக் கேகய நாட்டிற்குச் சென்றனர். அவர்கள் தசரதர் இறந்த சமாசாரத்தை அவனுக்குத் தெரிவிக்காமல், இராச்சிய விஷயமாக அயோத்திக்கு உடனே வந்து போகவேண்டுமென்று சுமந்திரர் அழைப்பதாகச் சொன்னுர்கள். பரதனும் அப்படியே புறப்பட்டுப் பாட்டனுரிடத்தில் விடை பெற்றுக்கொண்டு, அநேக பரிவாரத்தவரும் சேனைவீரரும் சூழ்ந்துவர, அசுவபதி கொடுத்த விலையுயர்ந்த பரிசுகளோடு அயோத்திக்குத் திரும்பினுன்.

பரதன் அயோத்தி நகரத்துக்குள் பிரவேசித்ததும், கீதவாத்தியத்தோடு சதா மங்களகரமாக விளங்கும் அந்த நகரத்து வீதிகள் யாவும் எவ்விதக் கிளர்ச்சியுமின்றித் துயர் மூண்டிருக்கக் கண்டான். பரதனுக்கு மிக்க திகிலுண்டாயிற்று. அவன் நேரே அரசனுடைய அரண்மனைக்கு இரதத்தைச் செலுத்திக் கொண்டு சென்ருன்; அரசன் அங்கில்லாதது கண்டு, தன் தாய் கைகேயியினது மாளிகையை அடைந்தான். கைகேயி அவனை இருகரங்களாலும் இன்புறத் தழுவித் தன்னுடைய தகப்பன், சகோதரன் முதலியவர்களது யோகக்ஷேமங்களை விசாரித்தாள். கைகேயியின் அந்தப்புரத்தி லிருந்த அரசனுடைய கட்டில் வெறுமை-

யாயும் கைகேயி தனிமையாயும் இருக்கக் கண்ட பரதன் தன் தாயைப் பார்த்து, 'அம்மா! என் தந்தை எங்கே?' என்று கேட்டான். அதற்கு அவள் சிறிதும் விசன மின்றி, 'உன் தந்தை இறந்தார்' எனப் பதிலுரைத் தாள். அதுகேட்ட பரதன் அடியற்ற மரம்போல கீழே விழுந்து அழுதான். பின்னர், தந்தை இறந்தபோது இராம இலக்ஷ்மணர் இருவரும் அவர் பக்கலில் இருந் தார்களா? அவர்களுக்குத் தந்தை யாது கூறினர்? என்பது போன்ற பல கேள்விகளைக் கேட்டுக்கொண்டே விம்மி விம்மித் துக்கித்தான். அப்போது கைகேயி, முன்னர்ச் சக்கரவர்த்தி யிடத்தில் தான் பெற்றிருந்த இரண்டு வரங்களை இப்பொழுது அடைவதற்குச்செய்த சூழ்ச்சியையும், ஒரு வரத்தைக்கொண்டு இராமனைக் காட்டுக்கு அனுப்பியதையும், மற்றொரு வரத்தால் இராச்சியத்தைப் பரதனுக்கு உரியதாக்கியதையும் சொன்னாள். இராமனைப் பிரிந்ததனால் உண்டான புத் திரசோகமே தசரதர் இறந்ததற்குக் காரணமா யிருக்க லாம் என்றும் தெரிவித்தாள்.

கைகேயி மதிகெட்டு, இராச்சியத்தைத் தன் குமாரன் அடைவதற்காகச் செய்த சூழ்ச்சிகளை நினைக்க நினைக்கப் பரதனுக்கு மிகுந்த கோப முண்டாயிற்று. கண்களில் தீப்பொறி சிந்த அவன் தாயைப் பார்த்து, "அம்மா, உன் எண்ணம் மிகக் கொடியது. அது விஷத் தினும் மிகக் கொடியது. இப்படிப்பட்ட துர்ப்புத்தி உனக்கு உண்டானதற்குக் காரணமென்ன? என் உயி ரினும் அரிய அண்ணல் இராமப்பிரபு காட்டில் வசித் துக்கொண்டு துன்பத்தை அநுபவிக்க நான் இராச்

சியத்தைப் பெற்று அரசு செலுத்திக்கொண்டு சம்பிரமமாக வாழ்ந்திருப்பே னென்பது உன்னுடைய அபிப்பிராயமா? துன்மதிகொண்டு நீ காட்டுக்கனுப்பிய அந்த இராமச்சந்திரரையே மறுபடியும் அழைத்துக் கொண்டு வந்து பட்டாபிஷேகம் செய்விக்கிறேன் பார். ஆ! பாபி, புருஷனைக் கொன்ற பாதகீ, நீ பிறந்த குலத்துக்கும், புகுந்த குலத்துக்கும் தீராவசையை உண்டு பண்ணினாய், என்னையும் தீராப் பழிக்கு ஆளாக்கினாய். நீ உன் தீச்செயல்களுக்காக மீளா நரகத்தை அடைவது திண்ணம்' என்று கடுகடுத்து உரைத்தான்.

தசரதருடைய தகனம் உத்தரக்கிரியைகள் முதலியா யாவும் முடிந்தபின், பட்டாபிஷேகம் செய்துகொண்டு இராச்சியத்தைக் கைக்கொள்ளும்படி மந்திரி முதலானோர் பரதனை வேண்டினர். அவன் அதற்கு இசையாது, மூத்தவனிருக்க இளையவன் பட்டங் கட்டிக் கொண்டு அரசாள்வது முறையன்று என மறுத்தான். இரகுவீரனைக் காட்டிலிருந்து அழைத்துவந்து பட்டாபிஷேகம் செய்விக்க வேண்டுமென்பதே தன்னுடைய உறுதியான தீர்மானமென்று வெளியிட்டான். பின்பு, பரதன் கௌசலையிடத்திற் சென்று அவள் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து, 'அம்மணீ, இத் துன்பங்கள் அனைத்தும் கைகேயி என்னும் கொடிய பாதகியின் செயல்களால் விளைந்தவையன்றி வேறல்ல. அப் பாதகி செய்த சூழ்ச்சிக்கு நான் சிறிதளவாயினும் உடன்பட்டிருப்பேனாயின் நான் கொடிய நரகில் வீழ்ந்து வருந்துவேன். இப்பொழுது உங்கள் குமாரரும் எனது அன்புடைய தமையனருமாகிய இராமமூர்த்தியை விட

மேலான தெய்வம் எனக்கு வேறில்லை. அவரைப் பிரிந்திருக்கும்படியான விதிக்கு நான் ஆளாவேன். அவரிருக்க நான் பட்டங் கட்டிக்கொண்டு அரசாள்வதில்லை' என்று பல சொல்லிப் புலம்பினன். இவ் வார்த்தைகள் கௌசலைக்கு ஆறுதலைத் தந்தன. அவள் பரதனுடைய பக்தியையும் விசுவாசத்தையும் வியந்தனள்.

அப்பால் பரதன் தன்னை ஒருவாறு தேற்றிக் கொண்டு தன் தந்தைக்குச் செய்யவேண்டிய சகல கிரியைகளையும் சரயுநதிக் கரையில் கிரமப்படி செய்து முடித்துப் பின் காட்டுக்குச் சென்று வனவாசியாயிருக்கும் ராமனை அழைத்து வரச் சத்துருக்னனுடன் புறப்பட்டனன்.



## 6. பரதன் தமையனைத் தேடிச் செல்லுதல், பாதுகா பட்டாபிஷேகம்

இராமர் பதினான்கு வருஷம் மரவுரி உடுத்துக் கொண்டு வனவாசம் செய்வதாக விரதம்பூண்டு காட்டுக்குச் சென்றனர் அல்லவா? அவ் விரதத்தை ஒழித்து விட்டு அயோத்திக்கு வந்து பட்டாபிஷேகம் செய்து கொள்ள அவரை உடன்படுத்த வேண்டுமென்பது பரதனது கொள்கை. ஆகையால், அவன் தனிமையாகச் சென்று அவரை அழைக்காது தன்னோடு நகரத்தி லுள்ள பிரஜைகள் மந்திரி பிரதானி முதலியோர்களையும் கூட்டிக்கொண்டு போய், தன் பொருட்டும் பிரஜைகள் பொருட்டும் இராமர் அயோத்திக்குத் திரும்பி வந்து சிம்மாசனத்தை அங்கீகரிக்க வேண்டுமென்று அவரைக் கேட்டுக்கொள்ளத் தீர்மானித்தான். ஆயிரக் கணக் கான பிரஜைகளும், மந்திரி பிரதானிகளும், நால்வகைச் சேனைகளும், இராணிமாரும் பரத சத்துருக்னரோடு இராமரை அழைக்கச் சென்று கங்காநதி தீரத்தை அடைந்தனர்.

அவர்கள் அங்குச் சென்றபோது அஸ்தமான வேளையா யிருந்தது. கிராதர்களுடைய தலைவனும் சிருங்கிபேர நாட்டிற்கு அரசனுமாகிய குகன் இராம ருக்கு உற்ற நண்பன் அல்லவா? அவன் பரதனையும் அவனுடைய பரிவாரத்தையும் கண்டு, ஓகோ! இவன் காட்டுக்கு வந்த ஸ்ரீராமனைத் தொடர்ந்து அவரோடு யுத்தம் செய்து அவரைக் கொல்ல வந்திருக்கிறான்; ஆதலால், நாம் நமது சேனாவீரரை ஒன்று சேர்த்துப் பரதனோடு யுத்தம் செய்து அவனைத் துரத்திவிட

வேண்டுமென்று எண்ணினன். ஆயினும், அப்படிச் செய்யுமுன் பரதன் எவ்வித நோக்கத்தோடு வந்திருக்கிறனென்பதை அறியலாமென்று தன்னுடைய பரிவாரங்களில் சிலரை மாத்திரம் அழைத்துக்கொண்டு நேராகப் பரதனிடம் சென்று, அவன் அங்கு வந்ததற்குக் காரணமென்னவென்று விசாரித்தான்.

சுமந்திரர் குகனை வெகு நாட்களாக அறிவர். அவர், குகனைப் பரதனுக்கு ஆருயிர் நண்பனுக்கினர். உடனே பரதன் குகனைத் தழுவிக்கொண்டான். பரதனுடைய முகவாட்டத்தையும் அண்ணல் இராமபிரானிடத்துள்ள அன்பையும் உள்ளபடி குகன் அறிந்து வெகு சந்தோஷமடைந்தனன். அவன் பரதனுடைய மனநிலையையும் சகோதரனிடத்திலுள்ள விசுவாசத்தையும் மெச்சி அவனுக்கு எவ்வித உதவி வேண்டுமென்றாலும் செய்வதாக வாக்களித்தான்.

பரதன் அன்றிரவைக் கங்கை நதிக்கரையில் கழித்து, பாகீரதியை மறுநாள் கடக்கத் தீர்மானித்தான். குகன் தன்னுடைய ஐந்நூறு ஓடங்களோடும் அவைகளுக்குத் தகுந்த ஆட்களோடும் சென்று பரதனும் அவன் பரிவாரமும் அக்கரை சேர்வதற்கு வேண்டிய உதவியைச் செய்தான்.

அப்பால் பரதன் கரையோரமாகவே சென்று பரத்துவாஜ மகரிஷியுடைய ஆச்சிரமம் அடைந்தனன். பரதனுடைய குண விசேஷங்களை நன்குய் அறிந்த ரிஷி சிரேஷ்டர் அவனுக்கும் அவனுடைய பரிவாரத்தவர்களுக்கும் பெரிய விருந்து செய்தார். பரத்துவாஜர் மகா சக்தியுடையவர். பரதனும் அவனுடைய பரிவா

ரங்களும் அம் மகரிஷி அளித்த விருந்தை உண்டு களித்து, அடுத்தநாள் அவ்விடத்தை விட்டு ஸ்ரீராமன் தங்கியிருக்கும் சித்திரகூட பர்வதச் சாரலை யடையப் புறப்பட்டான்.

இவர்கள் வெகு தூரத்தில் வருவதையும் இராஜத் துவஜம் ஆகாயத்தில் அசைவதையும் இலக்ஷ்மணன் கண்டு, ஓகோ! இராமர் இராச்சியத்திற்குப் பங்காளி யாதலால் அவரைக் கொல்லுவதற்காகப் பரதன் சேனை யோடு வருகிறான் என்று எண்ணினான். அன்பே உரு வாய் அமைந்த இராமபிரான் அவர்கள் பகைகொண்டு யுத்தம் செய்ய வரவில்லையென்றும், சிநேகிதத் தன் மையில் ஏதோ விஷயத்தைப் பேசி முடிவு செய்ய வருகிறார்களென்றும் சொல்லி இலக்ஷ்மணனுடைய கோபத்தை மாற்றினார்.

இதற்குள் பரதன் முதலாயினோர் சித்திரகூடத்தை அடைந்தனர். பரதன் அனைவரையும் வெளியே நிறுத் திவிட்டு இரதத்திலிருந்து இறங்கி ஸ்ரீகோதண்டராமன் இருக்கும் ஆச்சிரமத்துக்குட் சென்றான். சீதாபதி தன் அன்புள்ள சகோதரன் பரதனை ஆசையுடன் தழு விக்கொண்டு, அவன் இராச்சியத்தை எவ்விதமாக ஆண்டு வருகிறானென்றும், தாய் தந்தையர் எப்படி இருக்கிறார்களென்றும் விசாரித்தார்.

இளவரசர் விட்டுப் பிரிந்தபின் தந்தையார் துக்க சாகரத்தில் மூழ்கிப் புத்திரசோகத்தால் பொன்னுல கடைந்தன ரென்று பரதன் தன் தேகம் நடுக்குறக் கண்களில் கண்ணீர் சொரிய வெகு விசனத்தோடு சொன்னான். தந்தை இறந்தாரென்ற சொற்கேட்டதும் இராமமூர்த்தி மூர்ச்சை யடைந்து ஒன்றும் பேசாது

சிறிதுநேரம் சும்மா இருந்துவிட்டார். இலக்குமணனும் சீதையும் அடைந்த துக்கத்திற்கு அளவே இல்லை. அப்பால், தந்தை இறக்கும்போது தாம் அருகிலிருந்து அவருக்குச் செய்யவேண்டிய கடமைகளைச் செய்யும்படியான பாக்கியத்தைப் பெறவில்லையே யென்று இராமர் மிகவும் வருந்தினர். ஆயினும், மூத்த புதல்வராதலால் பிதாவுக்குத் தாம் செய்யவேண்டிய ஈமக்கடன்களைச் சமீபத்திலுள்ள மந்தாகினி நதியின் கரையில் செய்து முடித்தார்.

பின்னர், பரதன் இராமச்சந்திரரைப் பார்த்து, 'அண்ணா! தாங்கள் சுகமாக அரண்மனையில் இருப்பதை விட்டுக் காட்டில் அலைந்து திரிவது எனக்கு மிகுந்த மனவேதனையை உண்டாக்குகிறது. நமது தந்தையார் இறந்துவிட்டபடியால் மூத்த புதல்வராயுள்ள தாங்களே இராச்சியபாரத்தைத் தாங்கி அரசு செலுத்தவேண்டியது கடமை. இட்சுவாகு வம்சத்தில் இராச்சியத்தின் உரிமை மூத்தமகனுக்குத்தான் உண்டு. தாங்கள் இல்லாமையால் நமது நகரம் ஆதித்தனில்லா அவனியேபோல ஒளி யிழந்திருக்கிறது. பிரஜைகள் கன்றை இழந்த கறவைபோலக் கதறுகின்றார்கள். பாதகி கைகேயியே இவை யனைத்துக்கும் காரணம். அவளை என் தாய் என்று சொல்லுவதற்கும் என் நா கூசுகின்றது, அவமானமுமா யிருக்கிறது. ஆதலால், தாங்கள் சர்வ சுவதந்திரமுள்ள தமது இராச்சியத்தைக் கைப்பற்றி ஆளவேண்டுமென்று மிகவும் பணிவுடன் பிரார்த்திக்கின்றேன்' என்றான்.

தந்தைசொன் மிக்க மந்திர மில்லை யாதலால், சத்திய சீலரான இராமர் தந்தை சொல்லினின்றும்

அணுவளவேனும் பிசகுகிறவர் அல்லர் அவர் 'பரதா! வயதில் முதிர்ந்த நமது தந்தையாரின் வாக்கைப் பரிபாலிப்பது நம் மிருவருக்கும் முக்கியமான கடமையாகும். அவர் அன்னை கைகேயிக்கு வாக்குக் கொடுத்தபடி, இவ்விதமாகப் பூர்த்தி செய்தார். அவருடைய திரு வாக்கைக் காப்பாற்றாது தள்ளிவிடுதல் முறையோ? அது தர்மமாகுமோ? ஆகையால், உலகம் முழுவதையும் பெறுவதாயினும் நான் அவ்வாறு செய்யேன்' என்று சொல்லி மறுத்தார். அதற்குப் பரதன் மீண்டும், 'அண்ணா! தாங்களே அரசுரிமை வாய்ந்தவர். நான் தங்களுடைய குடிகளில் ஒருவன். பிரபு! தாங்கள் வந்து அரசாள் வேண்டியதே கிரமம்' என்று சொல்லித் தமையனை அயோத்திக்கு வரும்படி மறுபடியும் வற்புறுத்தினான்.

காகுத்தரோ, காசினியிலுள்ள எல்லாப் பொருள்களிலும் உண்மையையே மேலானதாக மதிப்பவராதலால் பரதனை நோக்கி, 'தம்பி! நீ அயோத்திக்குச் சென்று நான் வருகிற வரையில் அரசு செலுத்திக் கொண்டிரு' என்று உத்தரவு செய்தார். பரதனுக்கு அப்படிச் செய்ய இஷ்டமில்லாதிருந்தும் தமையனார் வார்த்தையைத் தட்டலாகாது என்னும் நியாயத்தால் உடன்பட்டான். ஆயினும், தன் பெயரால் அரசாளாது இராமப் பிரபுவின் பிரதிநிதியா யிருந்து அவருடைய பெயரால் அரசாளவேண்டு மென்பது அவனுடைய தீர்மானம். அவன் பரிசுத்தமான இரண்டு பாதுகைகளை இராமர் முன் வைத்து, அவைகளின்மேல் அவருடைய திவ்விய திருவடிகளை வைத்தருளும்படி வேண்டினான். இரவிகுலதிலகனும் அதற்கு இணங்கி,

'அப்பா பரதா! இவ்வளவாவது மனமிரங்கி வழிவிட்டனையே, அவ்விதமே செய்வேன்' என்று பாதுகைகளைத் தமது பாதங்களிற் பூட்டி விடுத்தனர்.

பரதன் அப் பாதுகைகளுக்கு அஞ்சலி செய்து எடுத்துச் சிரமேற் கொண்டு, 'அண்ணா! தாங்கள் திரும்பி வரும் வரையில் தங்கள் பிரதிநிதியாக அவ்விடமிருந்து அரசாள்வேன். தாங்கள் அரசரும் நான் தங்கள் பிரதிநிதியு மென்பதை ஜனங்கள் அறியும் பொருட்டுத் தங்கள் பாதுகைகளுக்குப் பட்டாபிஷேகம்செய்து நான் நகரத்துக்கு வெளியேயிருந்து அரசு செலுத்த உத்தேசித்திருக்கிறேன். தாங்கள் காட்டில் வனவாசம் செய்யவும், நான் அரண்மனையில் சுகமாயிருக்கவும் எனக்கு இஷ்டமில்லை. ஆதலால், நானும் மான்தோலும் மரவுரியும் சடைமுடியும் தரித்துக் காய் கனி கிழங்குகளைத் தின்று காலங் கழிப்பேன். நான் போய் வருகிறேன்' என்று சொல்லி இராமரிடத்தில் விடை பெற்றுக்கொண்டு, அயோத்திக்குத் திரும்பினான்.

பரதன் அயோத்திக்கு வெளியில் **நந்திக்கிராமம்** என்ற ஒரு சிறு கிராமத்தில் வாசம் செய்தான். அவன் இராமரைப் போலவே தவக்கோலங் கொண்டு, தன் மூத்தோனுடைய பாதுகைகளைச் சிம்மாசனத்தில் வைத்துப் பட்டாபிஷேகம் செய்து அவற்றிற்குப் பிரதிநிதியாகத் தான் அண்ணல் ஆக்கினையின்படி அரசு செலுத்தி வந்தான்.



## 7. தாசரதி தண்டகாரண்யம் அடைதல்

இராமர் தம் மனைவியோடும் தம்பி இலக்ஷ்மணனோடும் சித்திரகூடத்தில் தங்கியிருப்பது அயோத்தி நகரத்திலுள்ளவர்களுக்குத் தெரியும். ஆகையால் பலர் அவரிடத்தில் வரத் தலைப்பட்டனர். அதை அறிந்து இராமர் இன்னும் தெற்கே கொஞ்சதூரம் செல்லத் தீர்மானித்தனர். அப்படி அவர்கள் செல்லும்போது அத்திரி மகரிஷியுடைய ஆச்சிரமத்தை அடைந்தனர். அவர் அவர்களுக்குத் தகுந்த மரியாதைசெய்து மிக்க அன்புடன் உபசரித்தார். பதிவிரதா சிரோமணியாகிய அவருடைய மனைவி அநசூயை சீதைக்கு அவ்விடத்திலுள்ள விநோதக் காட்சிகளைக் காண்பித்து அவள் மனம் குதூகலிக்கச் செய்தாள். இன்னும் அநசூயா தேவி சீதாபிராட்டியை நல்ல வாசனையுள்ள புஷ்பங்களால் அலங்கரித்து, பூஷணங்கள் இல்லாமல் அம்மை சீதைக்கு ஏற்பட்ட இயற்கை அழகைக் கண்டு மகிழ்ந்தாள். இராமர் முதலிய மூவரும் அன்று இரவை அங்குக் கழித்து மறுநாள் புறப்பட்டுத் தண்டகாரண்யத்தை அடைந்தனர்.

அவ்விடத்தில் விராதன் என்னும் ஒரு பெரிய தேகமுள்ள இராக்கதன் சீதாதேவியைத் தூக்கித் தோள்மேல் வைத்துக்கொண்டு ஓடினான். அதைக் கண்ட இராமரும் இலக்ஷ்மணரும் அவன்மேல் அம்புகளைச் சரமாரியாகப் பொழிந்தனர். உடனே விராதன் சீதையைக் கீழே விடுத்து இராமலக்ஷ்மணர் இருவரையும் தோள்மேல் போட்டுக்கொண்டு காற்றினும் வேகமாய்ப் பாய்ந்து சென்றான். அவ்விருவரும் அவ

னுடைய வலிய பெரிய கரங்களை வாளினல் வெட்டி அவனைக் கீழே தள்ளினர்கள். அவன் பொத்தென்று பூமியில் விழுந்து இறந்தான்.

பிறகு இராமர் முதலிய மூவரும் பின்னும் தெற்கே வெகுதூரம் செல்லுகையில் அகத்திய முனிவரைச் சந்தித்தனர். அகத்தியரும் அவர்களை மிக்க அன்புடன் எதிர்கொண்டு விசாரித்து உபசரித்தார். அவர் இராமருக்கு அரிய அம்புகள், ஆயுதங்கள், அம்பறாத்தூணிகள் முதலியன கொடுத்தார். கோதாவரி நதிக்கரையிலுள்ள பஞ்சவடி இவர்கள் தங்குவதற்கு ஏற்ற இடமென்று அகத்தியர் சொல்லி அவ்விடத்திற்குப் போகும் மார்க்கத்தையும் தெரிவித்தார்.

பஞ்சவடி ஓர் அழகான வனம். அதில் ஓர் இடத்தில் ஐந்து (வடம் - ஆலமரம்) ஆலமரங்கள் நெருங்கியிருத்தலினல் அந்த இடத்திற்குப் பஞ்சவடி என்னும் பெயர் வந்தது. அப்பொழுது மழைக்கால மாதலால் அவ்விடத்துள்ள உயர்ந்த மரங்களுக்கும், குன்றுகளுக்கும் இடையில் பாயும் அருவிகளின் காட்சிகள் மிக மனோகரமாய் இருந்தன. இராமர் இலக்ஷ்மணர் சீதை ஆகிய மூவரும் அவ்விடத்தில் பர்ணசாலை ஒன்று இயற்றி, அதிலிருந்துகொண்டு பக்கலில் பழங்கள் நிறைந்த மரங்களில் பறவைகள் கொஞ்சிக் குலாவி விளையாடுவதையும், மான் கூட்டங்கள் துள்ளிக் குதித்து ஓடுவதையும் பார்த்துக்கொண்டும், தங்களுடைய அரண்மனைகளைக் குறித்துப் பேசிக்கொண்டும், இன்பமாகக் காலம் கழித்தனர்.



## 8. இராவணன் பிறப்பும் அரசியலும்

நமது இந்தியா தேசத்தின் தென் கிழக்கில் நாற்புறமும் ஜலத்தாற் சூழப்பட்ட ஒரு தீவு உண்டு. அதற்கு இலங்கை என்று பெயர். அத் தீவு எல்லா வளங்களும் பெற்றுச் செழிப்புற்றிருந்தது. ஒரு காலத்தில் ஆதிசேடனுக்கும் வாயுதேவனுக்கும் சச்சரவு உண்டாக, தேவர்கள் இவர்களுடைய பகையை நீக்கக் கருதி, இவர்களுள் யாவன் வல்லவன் எனத் தீர்மானிக்க ஒரு நியமனம் செய்தார்கள். அதாவது, ஆதிசேடன் தன் பலங்கொண்ட வரையில் மேருகிரியைத் தன் முடியால் மூடிக்கொள்வதென்றும், வாயுதேவன் அதனைத் தன் பலத்தால் அம் மேருகிரியினின்று அப்புறப்படுத்த வேண்டுமென்றும், இதில் ஜெயித்தவனே வல்லவனென்றும் கூறினார்கள். அதற்கு இணங்கிச் சேடன் தன் உடலாலும் பணாமுடியினாலும் மேருவைச் சுற்றி மூடிக்கொண்டான். வாயுதேவன் தன் பலங்கொண்ட வரையில் மோதி அவனை அப்புறப்படுத்த முயன்றான். அநேக நாட்கள் இப்படி இவர்கள் போரிட்டிருந்ததனால் உலகிலுள்ளோர்க்குச் சிரமம் உண்டாயிற்று. ஒருநாள் ஆதிசேடன் சிறிது தன் தலையைத் தூக்க நேர்ந்ததால் வாயுதேவன் தன் வேகத்தினால் மேருவின் ஒரு சிகரத்தைப் பெயர்த்துத் தென் சமுத்திரத்தில் வீழ்த்தினான். அப்படி விழுந்த நிலப்பாகத்திற்குத்தான் இலங்கை என்று புராணிகர்கள் சொல்லுகிறார்கள். அவ்விலங்கைத் தீவைக் குபேரன் என்னும் யட்சன் அரசாண்டு வந்தனன்.

விச்சிரவா என்னும் தபோதனர் ஒருவர் இருந்தனர். அவர் சுமாலி என்னும் அசுர சிரேஷ்டனின்

குமாரி கைகேசி என்னும் அழகு வாய்ந்த பெண்ணை மணந்து இராவணன், கும்பகர்ணன், சூர்ப்பநகை, விபீஷணன் என்னும் நால்வரைப் பெற்றார். இராவணன் சிறு வயதிலேயே பலாட்டியனாய் வில், வாள் வித்தைகளைப் பயின்றான். இன்னும் பல கலைகளையும் தன் பிதாவிடமே கற்று உணர்ந்தான். ஆனால் அவனுக்கு, உலகிலுள்ளவரனைவரினும் தானே சிறந்தவன் என்னும் அகம்பாவம் மாத்திரம் அதிகப்பட்டிருந்தது. இக் கொள்கையினால் அவன் பல பெரியோர்களை யடைந்து அவர்கள் அநுக்கிரகத்தால் பராக்கிரமங்கள் பலவற்றைப் பெற்றான். இவனைச் சிவபூசையிற் சிறந்தவனென்றும் சொல்லுவர்.

இலங்கையை ஆண்டுவந்த குபேரன் இராவணனுடைய தகப்பனான விச்சிரவாவுக்குப் பாத்துவாசர் குமாரத்தியான தேவகன்னி என்னும் மாதினிடம் பிறந்தவன். வைச்சிரவணன் என்பது இவனது முதற் பெயர். இவன் நவநிதிகளும் பெற்று இலங்கையில் அரசாண்டு வந்ததால் இவனுக்குக் குபேரன் என்று விசேஷப் பெயர் கொடுத்தனர். தாயாதியாகிய குபேரனது பெருஞ் செல்வத்தைக்கண்டு அசூயையுற்ற இராவணன் தன் தம்பிமார்களான கும்பகர்ண விபீஷணாதிகளோடு ஒரு பெருஞ் சேனையைத் திரட்டிக்கொண்டு குபேரனுடன் யுத்தஞ்செய்து, அவனை இலங்கையினின்றும் துரத்திவிட்டுத் தானே மகுடம் பூண்டு அரசாட்சி செய்துவந்தான்.

மயன் என்னும் தயித்தியன் ஒருவன் இருந்தான். அவனுக்கு அழகிற் சிறந்தவளும், எல்லா நற்குணங்களும் வாய்ந்தவளுமான மண்டோதரி என்னும் புத்திரி

உண்டு. மயன் அம் மண்டோதரியை இலங்காதிபனான இராவணேசுவரனுக்கு மணமுடித்தனன். மண்டோதரியின் வயிற்றில் இந்திரஜித்து, அட்சயகுமாரன் என்னும் அதிபராக்கிரமம் உள்ள இரண்டு புத்திரர் பிறந்தார்கள். கும்பகர்ணன், வச்சிரச்சுவாலை என்னும் அசுரகுலப் பெண்ணையும்; விபீஷணன், சுரபை என்னும் கந்தர்வகுல கன்னிகையையும் மணஞ்செய்து கொண்டார்கள். கும்பகர்ணனுக்குக் கும்பன், நிகும்பன் என்னும் இரண்டு பிள்ளைகள் பிறந்தனர். விபீஷணனுக்கு நற்குணம் வாய்ந்த திரிசடை என்னும் பெண் பிறந்தனள். இராவணன் தன் தங்கை சூர்ப்பநகையை வித்துருசிங்கவன் என்னும் அரக்கனுக்கு விவாகம் செய்து வைத்தான். இவள் சம்புகுமாரன் என்னும் புத்திரனைப் பெற்றாள்.

இராவணனுடைய குடும்பம் இப்படி விருத்தியடைந்ததால் குடும்பத்தவர்கள் புஜபல பராக்கிரமத்தில் அதிகரித்து எல்லாத் திக்குகளிலும் சென்று அவ்விடங்களிலுள்ள இராச்சியங்களை யெல்லாம் இலங்கேசனது ஆக்கினைக்கு உட்படுத்தினர். வெகுகாலம் இந்தப்படி இராவணன் தன் குடும்பத்தவர்களோடு சேர்ந்து யுத்தம் செய்து வந்ததனால் தபோதனர்களுக்கும், உலகிலுள்ள எல்லாப் பிராணிகளுக்கும் நடுக்கம் உண்டாகி அவரவர் தம் தம் இருப்பிடங்களை விட்டுக் குகைகளிலும், காடுகளிலும் மறைந்திருந்து பல கஷ்டங்களை அனுபவிக்க நேர்ந்தது. எல்லாரும் துயருற நேர்ந்ததன் காரணம் இராவணனின் பேராசை யன்றோ! இதனால் முனிவர்களும் இதர ஜனங்களும் தமது துயர்

துடைக்க எந்த உத்தமன் வருவனோ எனச் சதாகால மும் தத்தம் இஷ்ட தெய்வங்களைத் துதித்து வந்தனர்.

இராவணனுக்கு மகோதரன் என்னும் மந்திரி ஒருவன் இருந்தான். அவன் காலத்திற் கேற்றபடி தன் அரசனுக்குப் புத்திமதிகள் சொல்லுபவன்; சுயநலங் கருதுபவன். மந்திரிகள் அரசனுக்குப் புத்தி புகட்டுவதில் நமக்குக் கெடுதி வருவதாயினும் அதைக் கருதாது உற்ற சமயங்களில் தக்க நீதிகளை எடுத்துரைத்து வற்புறுத்தி வரவேண்டியது நியாயம். இவன் அப்படியில்லாது தனது அரசன் சென்ற வழியே விட்டு அவனைச் சந்தோஷிப்பிக்கச் செய்வதே பெருங் காரியமாக இருந்த துராத்மா. இராவணனுக்குப் பிற்காலத்தில் ஏற்பட்ட அழிவுக்கு இம்மந்திரியே காரணமென்றும் சொல்லலாம். இராவணன் தனக்கு நிகர் எவ்வுலகிலும் இல்லை என்று அகங்கரித்ததற்கு மந்திரி மகோதரனும் ஒரு காரணமாவான்.



## 9. சூர்ப்பநகை பங்கம்

பஞ்சவடிக்குச் சமீபத்தில் ஜனஸ்தானம் என்ற இடம் இருந்தது. அது இலங்கைக்கு அரசனான இராவணனுடைய ஆட்சிக் குட்பட்டது. அதை இலங்காதிபனுக்குப் பிரதிநிதியாக அவனுடைய சகோதரி சூர்ப்பநகை கரன், தூஷணன், திரிசிரன் என்னும் கொடிய இராக்ஷதத் தலைவரது உதவியைக் கொண்டு ஆட்சி செய்து வந்தனள். கர தூஷணர்கள் தங்களுடைய துஷ்டச் செயல்களினால் பஞ்சவடியில் வசிக்கும் முனிவர்களுக்கு மிக்க திகிலை உண்டாக்கிக்கொண்டிருந்தனர்.

சூர்ப்பநகையின் புருஷன் வித்துருசிங்கவன் ஒரு யுத்தத்தில் இராவணனால் கொல்லப்பட்டான். அதன் பிறகே அவளை இராவணன் ஜனஸ்தானத்திற்குத் தனக்குப் பிரதிநிதியாக ஏற்படுத்தினான். காட்டில் உலாவி வந்தபோது சூர்ப்பநகை ஒருநாள் பஞ்சவடியிலிருந்த இராம லக்ஷ்மணர் இருவரையும் கண்டாள். அவள் இராமருடைய பேரழகைக் கண்டு அவர்மேல் ஆசை கொண்டாள். அவள், காமவல்லி என்னும் பெயருடன் இராமர் முன் தோன்றித் தன்னை விவாகம் செய்து கொள்ளும்படி அவரைக் கேட்டாள். இராமர் தாம் முன்னமே விவாகம் செய்துகொண்டு மனைவியோடிருப்பதால், தமக்குப் பின்னுமொரு மனைவி வேண்டியதில்லை யென்று சொல்லி, அவளை இலக்ஷ்மணனிடத்தில் போய் அவனை விவாகம் செய்துகொள்ளும்படி கேட்குமாறு பரிகாசமாகச் சொல்லி அனுப்பினார். அவள் இலக்ஷ்மணனிடத்தில் போகவே, அவன், 'இரா

மச்சந்திரரே உன்னை விவாகம் செய்துகொள்ளத் தகுந்தவர்; நான் அவருடைய வேலைக்காரன். ஆகையால், அவரையே கேள்' என்று சொல்லிப் பழையபடி இராமரிடத்தில் அனுப்பினான்.

இவ்விதமாகச் சூர்ப்பநகையை அங்கும் இங்கும் அனுப்பி ஏமாற்றினது அவளுக்கு மிகுந்த கோபத்தை உண்டாக்கிற்று. ஆகையால், அவள் ஸ்ரீ ராமன் பத்தினி சீதையைத் தொலைத்துவிட்டால் இராமர் ஒரு வேளை தன்னை அங்கீகரிக்கக் கூடுமென்று எண்ணி, சீதையின் மேல் பாய்ந்து அவளைக் கொல்ல எத்தனித்தாள். இராமர் இனிமேல் இவளுடன் பரிகாசம் செய்வதில் பயனில்லை என்று கண்டார். ஆகையால், அவ் வரக்கியைத் தண்டிக்கும்படி இலக்ஷ்மணனுக்குச் சைகை செய்துவிட்டு, சீதையைக் காப்பதற்கு அவள் பக்கம் சென்றார். உடனே வீரனாகிய இலக்ஷ்மணன் உடைவாளை உருவி அவள் மூக்கையும், காதுகளையும் அறுத்தெறிந்தான். அறுபட்ட உறுப்புக்களிலிருந்து இரத்தம் ஆறாகப் பெருகச் சூர்ப்பநகை அலறிக்கொண்டு ஜனஸ்தானத்திலுள்ள இராக்ஷதர்களிடத்தில் சென்று, நடந்த விருத்தாந்தத்தைச் சொல்லிப் பழிக்குப் பழி வாங்க வேண்டுமென்று கதறினாள்.

கரன், தூஷணன், திரிசிரன் என்னும் மூவரும் அரக்கர் பலரோடு இராமர் தங்கியிருக்குமிடத்துக்குச் சென்று யுத்தம் செய்ய ஆரம்பித்தனர். இராமர் இலக்ஷ்மணனை அழைத்துச் சீதையை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளும்படி உத்தரவிட்டு வில்லை வளைத்து அஸ்திரப் பிரயோகம் செய்தார். இராக்ஷத

வீரரும், அவர்களுடைய சேனையும் இராமருடைய கொடிய பாணங்களுக்கு இரையாயினர்.

அதை அறிந்த சூர்ப்பநகை இலங்கைக்குச் சென்று தன் சகோதரன் இராவணனைத் தனக்கு உதவி செய்யும்படி கேட்டுக்கொண்டாள். அவள் பஞ்சவடியில் இராமர், இலக்ஷ்மணர் என்னும் இரண்டு இராஜரிஷிகள் வந்திருக்கின்றனர் என்றும், அவர்கள் தன்னை மானபங்கம் பண்ணினார்கள் என்றும், இன்னும் ஜனஸ்தானத்திலுள்ள இராக்ஷதர்களைக் கர தூஷணர்களுள்பட்க் கொன்றுவிட்டார்களென்றும் விஸ்தாரமாகச் சொன்னாள். மேலும் இராமருடைய மனைவி வெகு அழகுவாய்ந்தவளென்றும், அவள் இராவணனுக்கே மனைவியாயிருக்கத் தகுந்தவளென்றும் கூறினாள்.

இவற்றைக் கேட்டதும் இராவணனுக்கு மிக்க உக்கிராவேசம் உண்டாயிற்று. பின்னும் சீதையின் பேரழகைக் குறித்துச் சூர்ப்பநகை சொன்னவை அவனுக்கு மிகுந்த காதலை உண்டாக்கின. ஆகையால், சீதையை எவ்விதமாயாவது அபகரித்துத் தனக்கு மனைவி யாக்கிக்கொள்ள வேண்டுமென்று இராவணன் தீர்மானித்தான்.

அவன் தன் அம்மானாகிய மாரீசனைத் துணையாக அழைத்துக்கொண்டு பஞ்சவடிக்குச் சென்றான். இராமலக்ஷ்மணர்களோடு அச் சமயம் யுத்தம் செய்வது அவனுக்கு யுக்தமாகத் தோன்றவில்லை. ஆகையால், சீதை தனியா யிருக்கும்போது அவளைப் பலவந்தமாக எடுத்துக்கொண்டு செல்லத் தீர்மானித்து, அதற்கு வேண்டிய உபாயத்தைத் தேடினான். மாரீசனை அழ

கான பொன் மான்போல் உருக்கொண்டு சீதை முன் செல்லும்படி கற்பித்தான். மாரீசன் அப்படியே மானுருக் கொண்டு சீதை முன் சென்றான். அந்த மானுடைய தேகம் பொன்போலப் பிரகாசித்தது; தேகத்தில் வெண் புள்ளிகள் வைரம்போல் ஜொலித்தன. கால்களும், செவிகளும் மாணிக்கத்தைப்போல் விளங்கின. அந்த மாய மான் சீதையின் முன் ஒய்யாரமாகப் போய்த் துள்ளிக் குதித்துக்கொண்டிருந்தது. அம் மானைக் கண்ட சீதை அதன் மேல் ஆசை கொண்டு அதைப் பிடித்துத் தரும்படி தன் நாதனை வேண்டினாள்.

இராமர், மாரீசன் சூதை அறியாது சீதைமேல் உள்ள அன்பினால் அதைப் பிடித்துத் தர உடன்பட்டார். சீதையை இலக்ஷ்மணனது பாதுகாப்பில் வைத்துவிட்டு, அவர் அந்த மாய மானைப் பிடிக்கச் சென்றார். அப்போது அம் மான் அவர் அருகில் வருவதுபோல் வந்து உடனே ஓடுவதும், முற்றும் உடலை மறைப்பதும், மீண்டும் தோன்றிக் கைக் ககப்படுவது போலச் சமீபத்தில் வருவதுமாகத் துள்ளிக் குதித்துக் கொண்டே நெடுந்தூரம் அவரைப் பின் தொடர்ந்து வரச் செய்தது. அப்படிச் சென்று அதை உயிருடன் பிடிக்க வேண்டுமென்று கஷ்டப்பட்டும் அச் சிறு மான் பிடிபடாததால் அவர் அதை ஓர் அம்பினால் எய்து கொன்றார். பாணத்தால் அடிபட்ட அம் மான் தன் மாய வேடத்தைப் போக்கிச் சுய அசுர தேகத்தோடு பூமியில் விழுந்தது.

அப்படி விழும்போது மாயாவியான மாரீசன் இலக்ஷ்மணனைச் சீதையை விட்டு அப்புறப்படுத்த

எண்ணி, இராமர் குரல்போலவே 'ஹா! இலக்ஷ்மணா! சீதா!" என்று கூவினன். அக் கூக்குரல் சீதையின் காதில் விழுந்தது. இராமருக்கு ஏதோ அபாயம் நேரிட்டிருக்கவேண்டுமென்று எண்ணிச் சீதைஉடனே இலக்ஷ்மணனை இராமரிடத்துச் சகாயத்திற்குப்போகும் படி தூண்டினள். அதற்கு இலக்ஷ்மணர், 'இது அண்ணாவின் குரலன்று, இது ஏதோ சூதாக இருக்கிறது. அண்ணாவோடு எதிர்நின்று ஜெயிப்பவர் எங்கும் இலர். உங்களைத் தனியே விட்டுச்சென்றால் அரக்கர்களால் உங்களுக்கு ஏதாவது ஆபத்து நேரிடும். ஆகையால் எனது தமையனார் உத்தரவை மீறிச் செல்லுதல் கூடாது; அண்ணா வந்து விடுவார், பொறுங்கள்' என்றார்.

சீதை தன் கணவனுடைய க்ஷேமத்தைப் பெரிதும் கோரினவளாதலால் அவளுக்கு இச் சமயத்தில் மனந் தடுமாறி இன்னது சொல்வது என்று தெரியாமல் மீண்டும் இலக்ஷ்மணரைப் பார்த்து, 'உம்மைப் பார்த்தால் உமது தமையனாரிடத்தில் மெய்யான அன்புடையவர்போலக் காணப்படவில்லை. இன்னும் உமது எண்ணம் யாதென அறியவும் கூடவில்லை' என்று கடுகடுத்துச் சொன்னாள். இவ் வார்த்தைகள் அவர் மனத்தில் மிக்க வருத்தத்தை உண்டாக்கின. இளையவீரர் வேறு வழியில்லாது நெஞ்சம் பதைத்தபடியே பச்சை வண்ணனைப் பிரிந்த பாதகனேபோலப் பரிதபித்துத் தமது தமையனைத் தேடிச் சென்றார்.



## 10. இராவணன் சீதையை அபகரித்தல்

சந்நியாசி வேடத்துடன் ஆகாய விமானத்திலிருந்து நடந்த விஷயங்களைப் பார்த்துக்கொண்டிருந்த இராவணன் இதுதான் நல்ல சமயமென்று கீழே இறங்கி வந்து, சீதையிடத்திற் சென்று பிச்சை கேட்டான். சீதை முதலில் அவனை மெய்யான சந்நியாசியென்று நம்பி, 'ஐயா! நீர் யார், எங்கு வந்தீர், யாது வேண்டும்?' என்று விசாரித்தாள். அதற்கு, அக்கபட சந்நியாசி தான் இலங்காதிபனான இராவணன் என்று சொல்லி, சீதையைத் தூக்கி எடுத்து விமானத்தின்மேல் வைத்துக்கொண்டு தென்கடலிலுள்ள தன் இருப்பிடமாகிய இலங்கைக்கு ஆகாய மார்க்கமாகச் சென்றான்.

அப்போது பிராட்டி அச்சமும் துன்பமும் சினமுங்கொண்டு இராவணனை நோக்கி, 'ஏ, சண்டாளா! யான் தனியே இருப்பதை அறிந்து கள்ளன்போல என்னைக் களவாடிச் செல்கின்றனையே! நீ என்னை அபகரிப்பதற்காக மாயமானை அனுப்பி எனது பர்த்தா ஸ்ரீராமபத்திரரை நெடுந்தூரம் போகச்செய்து பிரித்தனை. ஏ கசடா! நீ சூரனானல் என் பர்த்தாவுடன் போர்செய்து வெற்றிகொண்டு என்னை எடுத்தேகுவாய். ஏ அரக்கா! நீ என்ன எண்ணங்கொண்டு என்னை எடுத்துக்கொண்டு போகின்றனையோ அந்த எண்ணம் ஒருகாலும் நிறைவேறாதென அறிவாய். விடத்தை உண்பவனும் வாழ்வுற்று மகிழ்வானோ; ஏ இராவணா! நீ காலபாசத்தினாற் கட்டுப்பட்டமையின் உனக்கு இது நலமெனவும் இது தீதெனவும் தோன்றவில்லை' என்று

பலவாறாக உரைத்து அக் கொடியோனை இகழ்ந்து ஸ்ரீராமனை நினைந்து புலம்பினள்.

சீதை, இலக்ஷ்மணரை அக்கிரமமாக இழித்துரைத்த வார்த்தைகளுக்குப் பலன் அவளுக்கு உடனே கிடைத்தது. கூற்றினுங் கொடியவனான இராவணன் அவளைத் தூக்கிக்கொண்டு போகும்போது அவள் தான் இலக்ஷ்மணருக்குச் சொன்ன தகாத வார்த்தைகளுக்காக மிகவும் வருந்தினாள். 'ஏ! இரகு வீரா! ஏ! நாதா! தம்பி இலக்ஷ்மணா' என்று கூவி அழுதாள். 'ஓ! பஞ்சவடியிலுள்ள மரங்களே! மிருகங்களே! பறவைகளே! என் நிலைமையைப் பாருங்கள், இராவணன் என்னைக் கொண்டுபோகிறா னென்று என் பர்த்தாவிடம் சொல்லுங்கள்' என்று கதறினாள்.

பஞ்சவடியிலுள்ள மரங்கள் ஒன்றில் வாசம் செய்துகொண்டிருந்த கழுகுகளுக்கு அரசனும் உருவில் பெரிய பறவையுமான ஜடாயுவைச் சீதை பார்த்துத் தன் துயரைத் துடைக்கலாகாதா என்று வேண்டினாள். சீதையுடைய பரிதாபமான கூச்சல் ஜடாயுவின் காதில் விழுந்தது. உடனே அது இடிமுழக்கம்போல் இரைந்து தனது பெருஞ்சிறகை வீசியெழுந்து ஆகாயத்திற் சென்று இராவணனுடைய வழியை மறித்துக் கொண்டது. அவன் மீறிச் செல்லாதபடி அவனது வீணைக் கொடியைக் கிழித்தெறிந்து, அவனது இரத்தின கிரீடத்தையும் காலால் இடறித் தள்ளிக் கொடிய யுத்தம் செய்தது. இராவணன் தன்னுடைய வாளால் அதன் இரண்டு சிறகுகளையும் வெட்டி அதைக் கீழே வீழ்த்தினான். பிறகு, இராவணன் தன்னை எதிர்ப்போர்

யாருமின்றித் தெற்கு முகமாக விமானத்தைச் செலுத்திக்கொண்டு இலங்கைக்குப் போகும்போது ஒரு மலையின்மேல் சிலர் கூடியிருப்பதைப் பிராட்டி கண்டாள். ஒருவேளை இவர்கள், தன்னைத் தேடிவரும் இராமலக்குமணர்களுக்குத் தான் சென்ற வழியைக் காட்டி யாதாவதோர் உதவி செய்யக்கூடுமென எண்ணினாள். பிராட்டி தான் உடுத்தியிருந்த வஸ்திரத்தின் ஒரு முனையைக் கிழித்து அதில் தம் நகைகளிற் சிலவற்றை முடிந்து, அம் முடிப்பை அவர்களின் நடுவில் எறிந்தாள். இராவணன் பஞ்சவடியைவிட்டு இலங்காபுரியை ஒரு நொடிப்போழ்தில் அடைந்தான். அவ்விடம் வந்து அவனோடு யுத்தம் செய்வது யாவர்க்கும் சாத்தியமாகாவென்பது அவனுடைய அபிப்பிராயம். ஆகையால், அவன் சீதையைச் சீக்கிரம் தன் வசமாக்கிக் கொள்ளலாமென்று எண்ணினான்.

இராவணன் சீதையை அசோக விருக்ஷங்கள் நிறைந்த உத்யானவனத்தில் வைத்து அவளுக்குக் காவலாகப் பல அரக்கிகளை ஏற்படுத்தினான். அவர்கள் இராவணனுடைய கீர்த்தியைப் பற்றியும் சக்தியைப் பற்றியும் செல்வத்தைப் பற்றியும் சீதாதேவிக்கு அடிக்கடி சொல்லுவார்கள்; அச்சொற்கள் பயன்படாமையால் அரக்கிகள் தேவியைப் பயமுறுத்தி இராவணனுக்கு மனைவியாகும்படிக் கட்டாயப்படுத்துவார்கள். இராவணனும் அசோக வனத்துக்கு அடிக்கடி நேரிற் சென்று தன்னைக் கணவனாக அங்கீகரிக்கும்படி சீதையைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்வதுண்டு.



## 11. சீதாதேவியைத் தேடுதல்

மாயமான் ரூபங்கொண்டு வந்த மாரீசனைக்கொன்ற பின் மாதவர் தம்முடைய ஆச்சிரமத்துக்கு ஊசலாடும் மனத்தோடு விரைந்து நடந்து வரும் வழியில் இலக்ஷ்மணனைக் கண்டார். 'அப்பா! ஏன் சீதையை விட்டு வந்தாய்?' என்று கேட்டார். அதற்கு இலக்ஷ்மணர், 'அண்ணா, அடியேன் ஆனமட்டும் அண்ணியாருக்குச் சொல்லிப் பார்த்தேன், கேட்கவில்லை, அதனால் வந்தேன்' என்றார். சீதை தனியாயிருக்கிறாளென்று தெரிந்து அவளிடத்துக்கு விரைவாகச் சென்றார். ஐயோ! பிராணநாயகியாகிய சீதையை அங்குக் காணவில்லை; கூட்டைத் தேடிவந்த உயிர் அதைக் காணாமல் திகைப்பதுபோலத் திகைத்து மயங்கினார். அவளுக்கு ஏதோ அபாயம் நேரிட்டிருக்க வேண்டுமென்று மனம் உருகினார். அப்படி வருந்தும் தசாத ராமனை இளைய வீரர், 'அண்ணா! பிறவியில் இன்பதுன்பங்கள் மாறி மாறி வருவது சகசமன்றோ? எல்லாம் விதிப்படி நடக்கும் என்று எண்ணிப் பொறுத்துக்கொள்ள வேண்டும். யாரைவிட்டது விதிவசம், மதிமிக்க மாண்புடையாரையும் அது விடாது பையப் பற்றுகின்றது. ஆனதால், துக்கப்படுவதை யொழித்துச் செய்யவேண்டியவைகளைச் செய்வோம்' என்று அவர் மனத்தைத் தேற்றினார். பிறகு இராமரும் இலக்ஷ்மணரும் சீதையைத் தேடப் புறப்பட்டனர்.

செல்லும் வழியில் அவர்கள் ஜடாயு என்னும் கழுகரசன் பூமியில் கிடந்து மரண வேதனைப்படுவதைக் கண்டார்கள். இராமபிரானைக் கண்ணாற்காணும் வரை

யில் தான் உயிரோடிருந்ததைக் குறித்து ஜடாயுவுக்கு மிக்க சந்தோஷமுண்டாயிற்று. இராவணனை வழிமறித்துச் சீதையை மீட்கத் தான் செய்த பிரயத்தனத்தைப் பற்றியும், அவன் தென்திசையை நோக்கிச் சென்ற விவரத்தைப் பற்றியும் ஜடாயு இராமருக்குக் குறிப்பால் அறிவித்து உயிர்விட்டது. அதன்மேல் அவர்கள் ஜடாயுவின் தேகத்தை அடக்கம் செய்துவிட்டுச் சீதையைத் தேடித் தென் திசையை நோக்கிச் சென்றார்கள்.

தென் திசையாகச் சீதையைத் தேடிச்செல்லும் போது இராமலக்ஷ்மணர் இருவரும் வழியில் ஒரு பயங்கர ரூபமுள்ள அரக்கனைச் சந்தித்தனர். அவனுக்குக் கவந்தன் என்று பெயர். அவன் தலை வயிற்றில் புகுந்ததுபோல் பெரிய தூல தேகமுடையவன். அவனுடைய கைகள் வெகு நீளமுள்ளவை. அவன் அக் கைகளை வெகுதூரம் நீட்டி, அகப்படும் வஸ்துக்களை வாரி யெடுத்து வாயிலிட்டுப் புசிக்கும் இயல்புடையவன். அந்த அரக்கன் அவர்களை எதிர்த்தான். அவர்கள் அவனுடைய கைகளை வெட்டி மாய்த்து அவனுடைய தேகத்தைத் தகனம் செய்தனர். அவன் இறக்குந் தருணத்தில் நல்லாரைச் சேவித்ததனால் நல்லுணர்வு உண்டாகி இவர்கள் அங்குவந்த காரணத்தை உணர்ந்து இராமப் பிரபுவைப் பார்த்து, 'ஸ்வாமீ! பம்பை என்னும் பொய்கைக்குச் சமீபத்திலுள்ள இருசியமுகம் என்னும் மலையில் வனவீரர்களின் தலைவனான வாலியின் தம்பி சுக்கிரீவன் இருக்கின்றான். அவன் மிகவும் நல்லவன்; நன்றியுள்ளவன்; தங்கள் உதவியையும் நாடக்கூடியவன். அச் சுக்கிரீவனுடைய

உதவியைப் பெற்றுத் தமது தேவி சீதையைத் தேடி அடையலாம்' என்றான்.

அப்படியே சகோதரர் இருவரும் இருசியமுக மலைக்குச் சென்றார்கள். வழியில் மதங்க ரிஷியினுடைய ஆச்சிரமத்தில் சபரி என்னும் ஒரு தவசிலையைக் கண்டார்கள். அவள் துறவறத்தை மேற்கொண்டவள். இராமரிடத்தில் மிக்க அன்புடையவள். அவள் தான் காட்டில் சேகரித்த காய், கனி முதலியவற்றை அவர்களுக்குக் கொடுத்து உபசரித்தாள். இராமரைக் கண்டதும் அவள் நித்திய பேரின்ப வாழ்வு கிடைத்ததேபோல் ஆநந்தித்தாள். அவர் சேவையே அவளுக்கு நற்கதி யளித்தது.

அப்பால் அவர்கள் வெகு சீக்கிரத்தில் இருசிய முகம் என்னும் மலையை அடைந்தனர். அங்குத் தனது தமையன் வாலியின் விரோதத்தால் வந்து தங்கியிருந்த சுக்கிரீவனது மந்திரியும் தோழனுமாகிய ஆஞ்சநேயர் அவர்களைச் சந்தித்தார். அவர்களுடைய பேரழகையும் தைரியத்தையுங் கண்டு அவர் ஆச்சரிய மடைந்தார். பின்பு அவர், அரசகுமாரர்களை அணுகி அவர்களை விசாரிக்கும் வகையில் அவர்கள் தம் அறிவு, ஆற்றல் முதலியவைகளை மெச்சும் வண்ணம் அரிய பெரிய விஷயங்களை, பேசி, அவர்கள் யாரென்றும் அவர்கள் காட்டுக்கு வந்த காரணம் என்னவென்றும் இலக்ஷ்மணரால் அறிந்தார்; பின்னும் அவர்களைச் சுக்கிரீவனிடத்தில் அழைத்துக்கொண்டு போகவேண்டிய இராஜதந்திர வகைகளையும் செய்து அழைத்துச் சென்றனர். மன்னர் மரபில் உதித்த சுக்கிரீவனும் அவர்

களை அரசர்க்குரிய மரியாதைகளைச் செய்து வரவேற்று, ஆஞ்சநேயர் அப்போது செய்த உபந்நியாசத்தால், இராமலக்ஷ்மணர் வனவாசம் செய்ய நேரிட்ட காரணத்தை அறிந்தான்.

அதனைக்கேட்டுச் சுக்கிரீவன் மிகவும் வருந்தினான். ஆயினும் பெரியார் இடருறுவதினாலேயே உலகில் நல்லறம் தழைக்கின்றது என்று மனந்தேறினான். இரவிகுலோத்தமனின் நட்புக் கிடைத்ததைப்பற்றி மகிழ்வடைந்தான். சுக்கிரீவனைச் சேர்ந்த வீரர்களிற் சிலர் ஒருநாள் இருசியமுக பர்வதத்துக்குச் சமீபத்தில் உள்ள குன்று ஒன்றின்மேல் இருந்தபோது சீதை தன் நகைகளைக் கட்டிப் போட்டனள் அல்லவா? அம் மூட்டையை அவ் வீரர்கள் கண்டெடுத்து வைத்திருந்தார்கள். அதை அவர்கள் எடுத்துவந்து அப்போதே சுக்கிரீவனிடத்தில் சேர்த்தனர். சுக்கிரீவன் அந்த ஆபரணங்கள் ஒருவேளை சீதாதேவியினது ஆபரணங்களாக இருக்கலாமோ வென்று எண்ணி, இராமரைக் கண்டவுடன் அம் மூட்டையை எடுத்துவரச் செய்து அதை அவரிடத்தில் கொடுத்தான். இராமர் மூட்டையைப் பிரித்து ஆபரணங்கள் தமது பிராணநாயகியினுடையனவே யென்று கண்டார்; வெகு தைரிய மடைந்தார். அன்று முதல் இராமரும் சுக்கிரீவனும் நெருங்கிய நண்பர் ஆயினர்.



## 12. ஸ்ரீராம சுக்கிரீவ உடன்படிக்கை

இருசியமுக பர்வதத்தைச் சுற்றி யுள்ள மலைப் பிரதேசங்களில் குரங்கைப் போல் மரங்களிலும், மலைகளிலும் வசிக்கும் மனித ஜாதியார் இருந்தனர். அவர்கள் செய்கை சில சந்தர்ப்பங்களில் குரங்கைப் போலிருக்கும் ; இருந்தாலும் அவர்கள் பேசுவதிலும், யுத்தம் செய்வதிலும், தேச பரிபாலனம் செய்வதிலும் வல்லவர்கள். அவர்களுக்கு அரசனும், மந்திராலோசனைச் சபையும் உண்டு. அவர்கள் தங்கள் முக்கிய பட்டணங்களில், அழகிய கூடகோபுரங்கள் அமைந்த மாளிகைகள் கட்டி அவைகளில் தங்கள் அரசன், அரசாங்க உத்தியோகஸ்தர், பிரபுக்கள் முதலியவர்கள் இருக்கச் செய்திருந்தனர். இன்னும், அரசன் அரண்மனையிலும் பிரபுக்கள் மாளிகைகளிலும் ஸ்திரீகள் இருக்க அந்தப்புரம் அந்தக் காலத்திலேயே ஏற்பட்டிருந்தது. பெண்களும், ஆடவரும் பல விலையுயர்ந்த ஆபரணங்கள் பூண்டிருந்தனர். கல்வி கேள்விகளிலும் சிறந்திருந்தனர். இத்தகைய சீர்வாய்ந்த ஜனங்களுக்கு அரசன் **வாலி**. அவனுடைய தலைநகரம் **கிஷ்கிந்தை**. வாலி அங்கிருந்து அரசு செலுத்தி வந்தான். அவனுடைய தம்பிதான் சுக்கிரீவன். சுக்கிரீவன்தான் இப்போது இராமருக்கு நண்பன் ஆனது.

வாலியும், சுக்கிரீவனும் ஒரு சமயம் மாயாவி என்னும் ஓர் அரக்கனோடு யுத்தம் செய்ய நேரிட்டது. அவர்க ளிருவரும் அவ் வசுரனைத் துரத்திக்கொண்டு செல்லுகையில் அவன் ஒரு குகையில் புகுந்து ஒளிந்து கொண்டான். வாலி, சுக்கிரீவனைக் குகையின் வாயி

வில் காவலாக நிறுத்திவிட்டு உள்ளே புகுந்தான். புகுந்தவன் ஒரு வருஷம் வரையில் வெளியே வரவில்லை. அதனால் வாலி இறந்தானென்று எண்ணிச் சுக்கிரீவன் கிஷ்கிந்தைக்குச் சென்று நடந்த விஷயங் களைச் சொல்ல, மந்திரி முதலியோர் யோசித்துச் சுக் கிரீவனை முடி சூட்டிக்கொள்ள வற்புறுத்தி அரசனாக் கினர். குகைக்குட்சென்ற வாலி நெடுங்காலம் அசுர னுடன் யுத்தம் செய்து அவனைக் கொன்றுவிட்டுப் பழையபடி கிஷ்கிந்தைக்கு வந்தான். அங்குச் சுக்கி ரீவன் அரசனாயிருக்கக் கண்டான். சுக்கிரீவன், வாலி யைக் கண்டதும் வணங்கி, தன் மீது பிழையொன்றும் இல்லா திருந்தும் பிழை பொறுக்கும்படி வேண்டி, தன் கிரீடத்தை வாலியின் பாதத்தில் வைத்து அங்கீ கரிக்கும்படி வேண்டினன். வேண்டியும் வாலிக்குக் கோபம் அடங்காமல் அவன் சுக்கிரீவனை இராச்சி யத்தை விட்டுத் துரத்தி அவனுடைய மனைவியாகிய உருமை என்பவளையும் கைப் பற்றிக்கொண்டான்.

இந்தப்படி இன்னல் அடைந்த சுக்கிரீவன் இராம லக்ஷ்மணர்களைத் தனக்குத் துணைவராக்கிக்கொண்டால் வாலியை வென்று தன் மனைவியை மீட்டுக்கொள்ள லாம் என்று எண்ணினன். இவ்வித அநுகூலம் அவர் களால் ஏற்படுமாயின், அவர்களுக்குச் சீதையை மீட் பதில் உதவி செய்ய இவன் உறுதி கொண்டான்.

இவ்விதமாக இராமரும், சுக்கிரீவனும் ஒருவருக் கொருவர் உதவி செய்வதாகத் தீர்மானித்து அக் காலத்தின் வழக்கப்படி அக்கினியை வளர்த்து அதன் முன் உடன்படிக்கை செய்துகொண்டனர்.



## 13. சுக்கிரீவ பட்டாபிஷேகம்

இவ் வுடன்படிக்கை சுக்ரீவனுக்கு மிக்க பலத்தைக் கொடுத்தது. அதனால் சுக்கிரீவன் தைரியமாகக் கிஷ்கிந்தா நகரத்திற்குட் சென்று வாலியின் அரண்மனையண்டை போய், உரத்த சத்தத்தோடு கூவி, வாலியைப் போருக்கு அழைத்தான். முன்பு தன்னுடன் போர் செய்யமாட்டாது திகிலடைந்திருந்த சுக்கிரீவன் தன்னைப் போருக்கழைத்தது வாலிக்குக் கோபத்தை அதிகரிக்கச் செய்தது. இதைக் கண்ட வாலியின் மனைவியாகிய தாரை, சுக்கிரீவனுக்கு மிக்க பலமான உதவி இருக்கிறதென்று உணர்ந்து அவனோடு யுத்தம் செய்யாது சமாதானம் செய்துகொள்வது நலமென்று பல நீதிகளைச் சொல்லி வாலியை வேண்டிக் கொண்டாள். ஆயினும், சிறிதும் பயமின்றித் தம்பியாகிய சுக்கிரீவன் தமையனாகிய தன்னைப் போருக்கழைத்தது வாலிக்கு அவமானமா யிருந்தது. ஆகையால் வாலி போருக்கெழுந்தான். இருவரும் கைகலந்தார்கள். யுத்தம் வெகு நேரம் உக்கிரமாய் நடந்தது. கடைசியில் சுக்கிரீவன் கீழே விழுந்து வாலியின் கையில் அகப்பட்டுக்கொண்டு மிகுந்த வேதனை யடைந்தான். அச் சமயத்தில் இராமர் தாம் முன் வாக்களித்திருந்தபடி வில்லை வளைத்து ஒரு பாணத்தை வாலியின்மேல் விட்டார். அது அவன் மார்பிற் பாய்ந்து அவனைக் கொன்றது.

வாலிக்குச் செய்யவேண்டிய கிரியைகளை அவன் மைந்தன் அங்கதனைக்கொண்டு ஸ்ரீராமபிரான் செய்து முடித்தனர். பின்பு சுக்கிரீவனுக்குப் பட்டங் கட்ட

வேண்டிய விஷயத்தைப்பற்றி இரகுவீரர் அநுமந்தருடன் ஆலோசனை செய்து, ஒரு சுபதினம் குறித்தனர். பிறகு புருஷோத்தமர் இலக்ஷ்மணரை அருகழைத்து, 'தம்பி! நீ கிஷ்கிந்தைக்கு இவர்களுடன் சென்று, நமது நண்பன் சுக்கிரீவனுக்குக் குறித்த சுப ஓரையில் முடிசூட்டி அம் மகோத்ஸவத்தை அருகிருந்து நடத்தி வா' என்றனர். இதைக் கேட்டதும் சுக்கிரீவன், ஸ்ரீராமப் பிரபுவைக் கிஷ்கிந்தா நகரத்திற்குள் வந்து பட்டாபிஷேக மகோத்ஸவத்தை அவரும் அருகிருந்து நடத்தும்படி பன்முறை வேண்டிக்கொண்டனன். அதற்கு அவர், தம் பிதாவின் ஆக்கினைப்படி பதினன்கு வருடமும் எக்காரணத்தினுலும் எப் பட்டணத்தினுள்ளும் பிரவேசியாது வனவாசியாயிருக்கவேண்டி யிருப்பதால், கிஷ்கிந்தா நகரத்துள் பிரவேசிக்க முடியாதென்று மறுத்து விட்டார். இலக்ஷ்மணனைக் கிஷ்கிந்தா நகரத்திற்குள் சுக்கிரீவனேடு சகல இராஜோபசாரத்துடனும் பிரவேசிக்கச் செய்து, இராமர் சுக்கிரீவனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்தார். பட்டாபிஷேக சமயத்தில் அந் நகரம் ஆதித்தன் வம்சத்தார் அரசாளும் அயோத்திமா நகரோ என்று நினைக்கும்படி அவ்வளவு அழகாய் அமைந்திருந்தது. மகர தோரணங்களாலும், ஆலவட்டம், கொடி முதலியவைகளாலும் அலங்கரிக்கப்பட்ட அக் கிஷ்கிந்தை இலக்ஷ்மணனும் கண்டு பிரமிக்கும்படி இருந்ததென்று சொல்லவும் வேண்டுமோ? சுக்கிரீவன் திருமுடி புனைந்து அரசனுகித் தன் மனைவி உருமையையும் அடையப் பெற்றுன். வாலியினுடைய மகன் அங்கதனும் இராகவன் ஆக்கினைப்படி இளவரசனுக நியமிக்கப்பட்டான்.

இராமரும், இலக்ஷ்மணரும் சுக்கிரீவ பட்டாபிஷேகத்திற்குப் பிறகு இருசியமுக மலை யடிவாரத்தில் பர்ணசாலை அமைத்துக்கொண்டு அப்போது மழை காலமானதால் அங்கு அதைக் கழிக்கத் தங்கினர். அப்படித் தங்கி வரும் நாளில் வீரராகவர், 'இது என்ன கால பலம்! எனது தோளில் அம்பறாத்தூணி நிறைய பகைவரது தேகத்தை எரிப்பன வாகிய அம்புக ளிருந்தும், எனது கையில் தன்னைக் கண்ட மாத்திரத்தில் பகைவரை நடுங்கச் செய்யும் வில் (கோதண்டம்) இருந்தும், எனது தேகத்தில் உயர்ந்து நீண்டு கல்லைப் போல் உறுதி யுள்ள புயங்க ளிருந்தும், இவைக ளெல்லாம் தொழி லின்றி உறங்கிக் கிடக்கின்றனவே. யான் இன்னும் சும்மா விருந்து இப்படித் துன்பம் அனுபவித்துக்கொண் டிருத்தல் தகுதியோ? தம்பி!'' என்று மனம் வருந்துவார். அக் காலங்களில் இளையவர் தமது முன்னோர்கள் கால வசத்தால் அடைந்த துன்பங்களையும், அவைகளினின்றும் நீங்கிச் சுகமடைந்த விவரங்களையும் சொல்லித் தேற்றத் தேறுவார். இப்படி நாட்களைக் கழித்து வருகையில் மழை காலமும் போய்ப் பனிக் காலமும் வந்தது. சுக்கிரீவ மகாராஜனோ சீதையைத் தேட இன்னும் ஒரு விதமான முயற்சியும் செய்யாது இராஜ போகங்களை அனுபவிப்பதிலேயே இருந்தான்; வாலியைக் கொன்று தனக்கு அரசளித்த வல்லவனுக்கு வாக்குக் கொடுத்ததை மறந்தான். இதை யறிந்த சத்திய சொரூபரான இராமர், சொன்ன சொற்படி நடவாத சுக்கிரீவனது சூழ்ச்சி என்னவோ என்று யோசித்து இலக்ஷ்மணரை அனுப்பி அவன் கருத்தை அறிந்து வரும்படி செய்தனர்.

இலக்ஷ்மணர் இருசியமுக மலையை விட்டு வில்லுங் கையுமாகப் புறப்பட்டுக் கிஷ்கிந்தா நகரத்திற்குள் கோபாவேசத்துடன் பிரவேசித்தார். அவர், சுக்கிரீவன் அரண்மனையை அணுகியதும் நாணை ஒலித்தார். அவ்வொலி நக ரெங்கும் பரவியது. இவர் இப்படிக் கோபத்துடன் வருவதை அங்கதன் மூலமாகக் கிட்கிந்தைக்கு அதிபன் கேட்டதும் அங்கதனுடைய அன்னை தாரையை அனுப்பி இளையபெருமாளின் சினத்தை இத வார்த்தைகளால் ஆற்றி அந்தப்புரத்திற்கு அழைத்து வரும்படி ஆக்கியாபித்தான். தாரா தேவி மெல்லென நடந்து வந்து இலட்சுமணர் முன் தோன்றி, 'ஐயனே, உமக்கு யார்மீது மனஸ்தாபம்? நண்பனை நாடி வந்த உமது கையில் வில் எதற்கு. பெரியோர்கள் தம்மை அடுத்தவர்கள் மீதும் கடுஞ் சினங் கொள்வார்களோ? இப்போது யாது செய்தால் உமது கோபம் ஆறும் என்பதை அறிவேன். மகாராசரும் உங்களது காரியத்தில் முயற்சி செய்யாமல் இல்லை. முன்பே தேவியைத் தேடும் விஷயமாகத் தமது அரசாட்சிக்குட்பட்ட பல பக்கங்களிலிருக்கும் நானாதேச சஞ்சாரிகளை அழைத்து வரும்படி அனுமான், நீலன் முதலியவர்களுக்குக் கட்டளையிட் டிருக்கின்றனர். ஆதலால் அவர்மீதுள்ள கோபத்தை மாற்றி யருள்வீர்' என்று சொல்லி இளையபெருமாளைச் சுக்கிரீவ மகாராசரிருக்கு மிடத்திற்கு அழைத்துச் சென்றனள். இளையபெருமாளைக் கண்டதும், சுக்கிரீவன் தன் அழகிய பஞ்சணையிலிருந்து எழுந்து நின்று, புன்முறுவலுடன் இலக்ஷ்மணரை வரவேற்று அருகிருந்த ஆசனத்தில் இருக்கச் செய்தனன். பின்பு தனது மந்திரி அநுமந்தரை அழைத்து, 'இராவணன்

சீதையைத் தெற்கு நோக்கி எடுத்துச் சென்றதால் நீர் மகா வீரர்களான அங்கதன், நளன், நீலன், ஜாம்ப வான் என்னும் இவர்களோடு சென்று அப் பக்கம் போய்த் தேடி வருக' என்றனன்; இன்னும் இதற் கென வரவழைக்கப்பட்ட தேச சஞ்சாரிகளைத் தனது சைனியத்திலுள்ள வீரர்களுடன் சேர்த்துப் பல பக்கங் களிலும் போய்ச் சீதாதேவியைத் தேட உத்தரவிட்டு, இலக்ஷ்மணருடன் ஸ்ரீகோதண்ட ராமனைக் காணச் சுக்கிரீவன் புறப்பட்டனன். அதனால் இலக்ஷ்மணர் கோபந்தணிந்து, சுக்கிரீவ மகாராசனை அழைத்துக் கொண்டு ஸ்ரீராமரிடம் வந்து சேர்ந்தார்.

ஸ்ரீராமபிரான், சுக்கிரீவனைக் கண்டதும் கோபந் தணிந்து, 'அப்பா! சுக்கிரீவா, என்ன தாமதம்?' என்று வெகு சாந்தமாய்க் கேட்டனர். அதற்குச் சுக்கி ரீவன் அதிக பணிவுடன் 'நண்பரே! தாமதம் ஒன்றும் இல்லை. சிறியேன் செய்த பிழையைப் பொறுத் தருள்வீர். யான் உமக்குச் சொல்லியபடி செய்யச் சிறிது தாமதப்பட்டதேனும் தமது தேவியைத் தேடுவதற்குச் செய்யவேண்டிய சகல காரியங்களையும் செய்து முடித்தேன். எனது சைனியத்திலுள்ள வல் லவர் பலரைப் பல திக்குகளிலும் அனுப்பியுள்ளேன். தேவியை இராவணன் தெற்கு நோக்கிக் கொண்டு போனதால் அப் பக்கம் செல்ல அதிவீரரும் எனது உயிர்த்தோழரும், சகல கலாவல்லவரும் ஆகிய அநு மந்தருடன் மகாவீரர்களான அங்கதன், நளன், நீலன், ஜாம்பவான் இவர்களையும் சேர்த்துப் போகும்படி ஏற்பாடு செய்துள்ளேன். அநுமந்தரும், செல்லுமுன் தங்கள் சேவடி தொழுது தமது உத்தரவைப் பெற் றுப்போக இதோ காத்திருக்கின்றார்' என்றனன்.

ஸ்ரீராகவர், அநுமான் தெற்கு நோக்கிச் செல்கின்ருர் என்றதைக் கேட்டதும் தன் தேவியை அக்கணமே பெற்ருற்போலப் புளகாங்கிதராகி, அஞ்சனையின் செல்வரை அருகழைத்து, 'ஐய, நீர்தாம் இக்காரியத்தைச் சாதிக்க வல்லவர் என்பதை யான் அறிவேன்; உமக்கு ஜெயம் உண்டாகுக' என்று சொல்லித் தமது கணையாழியைக் கழற்றி அநுமான் கையில் கொடுத்தார். பின்னும் அவர், 'இக் கணையாழியைச் சீதையிடம் காட்டினுல் அவளுக்கு உம்மிடம் நம்பிக்கை உண்டாகும். நீர் என்னிட மிருந்து வந்த தூதரென அறிந்துகொள்வாள்' என்ருர். இன்னும் தமக்கும் தமது தேவிக்கும் மாத்திரம் தெரிந்துள்ள சில இரகசியங்களையும் அவரிடம் சொல்லி, போய்வரும்படி வெகு சந்தோஷத்துடன் உத்தரவளித்தனர்.

அநுமந்தரும் அவரைச் சேர்ந்த வீரரும் தென் பிரதேசங்களில் ஸ்ரீராமப்பிரியையைத் தேடச்சென்றனர். அங்குச் சென்றதும் அவர்கள் அத் திசையில் சூரிய கிரணங்கள் செல்லக்கூடாத இடங்களுக்கும் சென்று தேடியும் காணுததால் கடலைக் கடந்தாயினும் இலங்கைக்குச் சென்று, அத் தீவையும் சோதித்து விடுவதே தமது கடமை என்று தீர்மானித்தனர். ஆனுல் சமுத்திரத்தை யார் தாண்டுவது? எல்லாராலும் முடியுமா? ஆகவே வீரர்கள் யாவரும் ஒரேமனமாக மாருதிதான் சமுத்திரத்தைக் கடந்து இலங்கைக்குச் செல்லவேண்டும் என்று தீர்மானித்தார்கள்.



## 14. அநுமான் சமுத்திரத்தைக் கடத்தல்

சீதாபிராட்டியைத் தேடும்படி சமுத்திரத்தைக் கடந்து இலங்கைக்குச் செல்லுதல் அநுமானுடைய கடமையாயிற்று. ஆகையால் எல்லாரும் மகேந்திர மலையைக் கடந்து சமுத்திர தீரத்தை அடைந்தனர். அங்கு அஞ்சனையின் மைந்தன் அலைகடலைக் கண்டு, 'இதைத்தானே யான் கடக்க வேண்டுவது? ஸ்ரீராம பிரானை உண்மையாக வழிபட்டவர் இதைக் காட்டிலும் அரிய செயலைச் செய்யவல்லவர் ஆவர். என்னே, இஃது அதிசயம்! யான் ஒரு கணப்போதில் இதைக் கடக்க வல்லேன். வீரர்களே? காண்பீர் எனது சமர்த்தை' என்று சொல்லி, ஓங்கி உலகளந்த உத்தமன் போலக் கம்பீரமாக அத் திக்குநோக்கி நின்று சீதையைக் காணவேண்டும் என்ற பேராவலோடு ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தார். கரையிலுள்ளோர் யாவரும் ஜயகோஷம் செய்து அநுமந்தருக்கு 'ஜெயம் பெருகுக, ஜெயம் பெருகுக' என்று ஆரவாரித்தனர்.

மாருதி வாரிதியைக் கடந்து சென்ற வேகத்தில் பரந்த கடல்நீரானது இரு பிளவுற்று விலகிட, அதன் அடிப்பாகத்திலுள்ள இரத்தினங்களெல்லாம் வெளியிற் றோன்றி ஜொலித்தன. வெளித்தோன்றிய அவ்விரத்தினங்கள் வாயுவேகமாக வரும் வல்லவனுக்கு வருணதேவன் இரத்தினாகரமாகிய சமுத்திரத்திலிருந்து ஜீவரத்தினங்களைக் கொண்டு வந்து காணிக்கையாகக் ,கொடுப்பதுபோல இருந்தன. இப்படிச் செல்லுகையில் மைநாகம் என்னும் உயர்மலையொன்று அச் சமுத்திரத்தின் மத்தியில் இருந்தது. அவர் அங்குச் சிறிது தங்கி மற்றுமுள்ள பாகத்தைக் காற்றினும்

கடிய வேகத்தால் தாவிக் கடந்து இலங்கைக் கரையை அடைந்தனர்.

இலங்கைக்கரையில் இராவணேசுவரனால் காவலாக அமைக்கப்பட்ட அங்காரதாரை என்னும் அரக்கி இவரைத் தடுத்து, 'நீ யார், என்ன காரணமாக இங்கு வந்தாய்? உன்னை நசுக்கிப் பிழிந்திடுவேன், திரும்பிச் செல்' என்றாள். அதற்கு அநுமான், 'ஏ அரக்கி! என்னிடத்தில் வாதிடாதே, வழிவிடு' என்று சாந்தமாகச் சொல்லியும் அவள் கேளாது உக்கிராவேசத்துடன் பாய்ந்து வரவே அவள் பெருவயிற்றின்மேல் அறைந்து குடலைப்பிடுங்கி அவள் தேகத்தைக் கடலில் எறிந்தார். அதன்பின் அஞ்சனையின் சிங்கம் இலங்கைத்தீவின் கரையோரத்திலிருந்த இலம்ப மலைமேல் ஏறி இலங்காபட்டணத்தின் அமைப்பு, காவல் முதலியவற்றைக் கண்டு அதிசயித்தார்; எதற்கும் அஞ்சாத தீரர் இலங்கையின் அமைப்பைக் கண்டு சற்று நிதானித்தார். 'என்னே இதன் அரண்கள்! என்னே இதனுட்காவல்! எவ்வகைச் செல்வது! எங்குச் சீதையைக் காண்பது!' என்று தயங்கினார். பின்னர் தேறி, மனோற்சாகத்துடன் அந் நகரத்தின் அகழியையும் கடந்து அதன் வடக்கு வாயிலை அடைந்தார்.

இலங்கைப்பட்டணம் மலையின்மேல் கட்டப்பட்டிருந்தது. அதைச் சுற்றிலும் நாற்கோணமுள்ள ஏழு மதிற்சுவர்கள் ஒன்றன்பின் ஒன்றாகக் கட்டப்பட்டிருந்தன; மிகவும் பலமாக அமைக்கப்பட்ட நான்கு உயரமான வாயில்கள் நாற்புறமும் விளங்கின. ஆயுதம் தரித்த போர்வீரர் பலர் அவ் வாயில்களைக் காவல் செய்தனர். அந் நகரத்தில் பற்பல கட்டடங்களும்

நவரத்தினகசிதமாக விளங்கும் பல அரண்மனைகளும், மாடமாளிகைகளும் இருந்தன; எல்லாவற்றிற்கும் வெளியேயுள்ள மதிற்சுவரின் பக்கத்தில் நாற்புறமும் சேனுவீரர் நிறுத்தப்பட்டிருந்தனர். அதன் நான்கு மூலைகளிலும் நான்கு சிறு கோபுரங்கள் விளங்கின. அதை ஒவ்வொன்றிலும் போர்வீரர் நின்று காவல் செய்து கொண்டு இருந்தனர். இவை யெல்லாவற்றிற்கும் வெளியே பகைவர் கண்டஞ்சும் ஆழமான அகழி நகரத்தைச் சூழ்ந்திருந்தது.

வடக்கு வாயிலில் அரக்கர் பலர் ஆயுத பாணிகளாய்க் காவல் புரிவதால் அவர்களுடன் போர் செய்து காலத்தைப் போக்குவதினும் ஆகாயமளாவிய அக்கோட்டைமதிலைத் தாவிச்செல்வதே நலமென நினைத்து அநுமான் மதிலின் பக்கலிற்சென்று தாவ முயன்றனர். அப்போது அங்கு அந் நகரைக் காக்கும் இலங்கணி என்னும் அரக்கி இவரைக் கண்டு, 'நீ யார் எங்கு வந்தாய்?' என்று அதட்டிக் கேட்டனள். இவர் வெகு விநயமாய், 'யான் இவ்வழகிய இலங்காபுரியைச் சுற்றிப் பார்க்க வந்திருக்கிறேன். தயவு செய்து வழி விடு' என்றனர். அதற்கு அந்த அரக்கி முடியாதெனச் சொல்லி ஓங்கி அநுமானை ஓர் அறை அறைந்தனள். அதன் மேல் மாருதி மறுமுறை அவள் தன்னைத் தீண்டாவண்ணம் தனது இடக்கை முஷ்டியால் அரக்கியினது தாடையிற் குத்த, அவள் அதைத் தாங்க முடியாது அலறி அவ்விடம் விட்டோடினுள். இதுவே நல்ல சமயமெனக் கருதி இராமதூதர் மதிலைத் தாண்டிக் குதித்தனர்.



## 15. அநுமான் சீதையைத் தேடுதல்

அப்பால் அநுமார் யாதொரு விதமான தடையு மில்லாமல் மதிற் சுவர் ஓரமாகவே நகரத்துக்குட் சென்றார். அவர் வெகு தைர்யத்துடன் அந் நகரம் முழுவதையும் ஆராய்ந்து சீதையைத் தேடிப் பார்க்க ஆரம்பித்தார். நகரத்தின் புறத்திலேயே விலையுயர்ந்த சாமான்களினால் வெகு அழகாகக் கட்டப்பட்டுள்ள உன்னதமான வீடுகளில் பிரபுக்கள் இருக்க அவர் கண்டார். வீதிகளில் புஷ்பமாலைகளும், அழகிய பொன் தோரணங்களும் விளங்கின. இராஜவீதியில், சேனாவீரரும் பல இராஜாங்க உத்தியோகஸ்தரும் நிறைந்திருக்கக் கண்டார். அங்கு மிக்க அழகுடை யவர்களும் செல்வச் செருக்கால் அகங்காரப்பட்டவர் களுமான பலரைக் கண்டார். நகரத்தின் மத்தியில் இலங்காதிபனான இராவணனுடைய அரண்மனை மற் றெல்லாக் கட்டடங்களைப் பார்க்கிலும் வெகு ரமணீயமு மானதாய்ப் பொன்மயமாக விளங்கிற்று. அதில் இலங்கேசனது வீணைக்கொடி ஆடிக்கொண்டிருந்தது.

அநுமார் நகரமெங்கும் சென்று எல்லா வீடுகளி லும், வீதிகளிலும், சிங்கார வனங்களிலும் தோட்டங் களிலும் சீதையைத் தேடினான். இராவணனுடைய அரண்மனையையும், அவன் கொலுவிருக்கும் மண்டபங் களையும், மற்றும் அரண்மனையிலுள்ள இடங்களையும் சதுக்கங்களையும் அவர் நன்றாகச் சுற்றிப் பார்த்தார். பிறகு இலங்கேசனது அந்தப்புரத்துள் பிரவேசித்தார். அங்கு அம்ஸதூளிகா மஞ்சத்தில் இராவணன் மகா தேஜசுடன் படுத்திருப்பதைக் கண்டார். வனதேவ

தைகளோ என்று எண்ணும்படியான வனிதையர் பலர் உபசாரம் செய்தவண்ணம் அவரவர் நிலையில் இருந்து உறங்குவதையும் கண்டார். பின்னும் மற்ருேர் மஞ்சத்தில், மகா உத்தமியும் அழகிற் சிறந்தவளுமான இராவணன் பட்டமகிஷி மண்டோதரி சயனித்திருப்பதைக் கண்டார். இவ்வுத்தமியைக் கண்டதும் இவர் தாம் ஜானகிபிராட்டியோ என்று எண்ணினர். ஸ்ரீராம பிரானது பத்தினியும், அவரைப் பிரிந்தபோது இத் தகைய சுகங்களை நாடுவாரா? நாடார், ஆதலால் சீதாதேவியல்லள் என்று தேறினர். அப்பால் அந்தப் புரத்தை விட்டு வாகனமண்டபங்களுள் நுழைந்தார். இராவணன் குபேரனிடத்தி லிருந்து ஜெயித்துக் கொண்டதும், நினைத்தமாத்திரத்திலே எங்கு வேண்டு மென்ருலும் போய்வர ஏதுவானதுமான புஷ்பக விமானத்தையும் அவர் கண்டார்; எவ்விடத்திலும் சீதை அகப்படவில்லை.

இனிமேல் என்ன செய்வதென்று அநுமானுக்கு ஒன்றும் தோன்றவில்லை. ஆயினும் சீதையைக் காணுமல் போவதில்லையென்று பிரதிக்கினை செய்து கொண்டார். ஆகையால் அவர் தாம் தேடாதவிடம் ஏதாவதுண்டோவென்று சுற்றிப் பார்த்தார். வெகு தூரத்தில் தேடிப் பார்க்காத சிங்கார வனமொன்று இருப்பதாக அவர் கண்ணுக்குத் தோன்றிற்று.

இராமதூதர் உடனே அங்குச் சென்ருர். அந்த வனம் தன் மர நிழலில் தங்குவோரது சகல துக்கங்களையும் நீக்கி அவர்க்கு மிக்க சந்தோஷத்தைக் கொடுக்கக் கூடிய அசோகமரம் நிறைந்த வனமாதலால் அதற்கு அசோகவனம் என்று பெயர். 'ஆஹா இது உல்லாச

மாகப் பொழுது போக்குவதற் கேற்ற சிறந்தவனம், நிழல் எவ்வளவு குளிர்ச்சி யுடையதாய் இருக்கிறது, இங்கு வீசும் இளந்தென்றல் எவ்வளவு இன்பத்தைத் தருகிறது!'' என்று அநுமார் பலவாருகத் தமக்குள் புகழ்ந்தார். இராவணன் சீதையை இங்கு வைத்திருந் தாலும் வைத்திருக்கலாமென்று எண்ணினர். அப் போது அசோகமரம் ஒன்றினடியில் சிறு கூட்ட மொன்று காணப்பட்டது. உடனே ஒரு பெரிய மரத் தின்மேல் ஏறி, இலைதழைத்த அதன் கிளை யொன்றில் உட்காந்து அங்கு நடக்கும் விஷயங்களை அவர் கவனித் தார். அக் கூட்டத்தின் நடுவில் வெகு அழகாய்ப் பூத்துத்தழைத்த ஒரு மரத்தைச் சுற்றிப் பளிங்கு மேடை ஒன்று வட்டமாகக் கட்டப்பட் டிருந்தது. அம் மேடையின் மேல், மிக்க வனப்பு வாய்ந்த ஒரு பெண் ஆரணங்கோ என்று எண்ணும்படி வாடிய முகத் துடன் இருக்க இராமதூதர் கண்டார்; அம் மாதே சீதையெனத் தீர்மானித்து ஆநந்தமடைந்தார்.

மிகக் கொடூரமான பார்வையும் தடித்த தேகமு முள்ள அரக்கிகள் பலர் சீதையைச் சூழ்ந்திருந்தனர். சீதை எப்படி இருக்கிருளென்று அடிக்கடி இராவண னுக்குத் தெரிவிப்பதும், பயத்தினலும் இதமான வார்த்தைகளினலும் அவளை இராவணனுக்கு மனைவி யாக இணங்கும்படி செய்வதுமே அவ்வரக்கிகளு டைய வேலை. இவ்வளவு அழகும் இளம்பருவமும் உடைய சீதையை அவருடைய நாயகராகிய இராமபிரான் இல்லாத சமயத்தில் இராவணன் அப கரித்து வந்தது அநுமந்தருக்கு மிக்க துயரை உண்டாக்கியது.

அச் சமயத்தில் இராவணன் தன் மெய்காப்பாளருடன் வெகு ஆடம்பரமாகச் சீதையிடத்தில் வந்து தன்னைக் கணவனாக அங்கீகரிக்கும்படி அவ்வம்மையை வேண்டினான். அவனைக் கண்டதும் கற்புக்கரசியார் காலனைக்கண்ட உயிரேபோல விதிர்விதிர்த்துக் குலைந்து நடுங்கி ஒடுங்கினார். அவன் தன்னுடைய பேரழகையும் அபார சக்தியையும் பூமியில் தனக்குள்ள அதிகாரத்தையும் திரண்ட செல்வத்தையுங் குறித்துப் புகழ்ந்து பேசினான்.

புருஷோத்தமனும் ஸ்ரீ கோதண்டராமனுக்கே தன்னைத் தத்தம் செய்த உத்தமியாம் சீதைக்கு இராவணனுடைய தற்புகழ்ச்சி வேம்புபோலக் கசந்து வெறுப்பாயிருந்தது. அவனுடைய கெட்ட அபிப்பிராயத்தைக் குறித்து அன்னையார் அவனை எச்சரித்தனர். 'ஏ! இராவணா! நீ என்ன அறிவற்றவனைப்போல யோசியாமல் பிதற்றுகிறாய்! உன் உயிரைக் காத்துக் கொள்ள வழிதேடு, தேவாமிர்தத்தை நாய் விரும்பியதுபோல என்னை அடைய ஆசைப்படுகிறாய். கோதண்டராமன் கணை கூடிய சீக்கிரத்தில் உன்னைத் தேடிவரும். இவ்விடத்தை விட்டோடிப்போ' என்று சொல்லி, பின்னும் அவன் மனத்தில் நன்றாகப் பதியும்படி பல நீதிகளையும் பிராட்டியார் போதித்தனர். சீதையைத் தன்மேல் காதல் கொள்ளும்படி செய்தல் இயலாது என்று இராவணன் கண்டு, சீதைக்குக் காவலாக இருந்த அரக்கிகளைப் பார்த்து, 'நீங்கள் இவளை என் கருத்துக்கு இசையும்படி வற்புறுத்துங்கள்' என்று சொல்லி வெகு கோபத்தோடு தன் அரண்மனைக்குச் சென்றான்.

அரக்கிகள் அதைக் கேட்டுச் சீதைக்குப் பலவித மான துன்பங்களைச் செய்ய ஆரம்பித்தனர். அவ் விதம் செய்தாவது சீதையினது மனத்தைத் திருப்ப வேண்டுமென்பது அவர்களுடைய அபிப்பிராயம். சீதைக்கு வரவரத் தைரியம் குன்றியது. இராகவன் நம்மை மறந்தார், இனி நம்மைத் தேடிவரப்போவ தில்லை என்று தீர்மானித்தார். இங்கு இத்தகைய துன்பங்களை அனுபவிப்பதைவிடத் தம் உயிரை மாய்த்துக்கொள்வது நலமென்று கருதினார்.

பிராட்டியைச் சூழ்ந்திருந்த அரக்கிகள் பலருள் இராவணனுடைய தம்பி விபீஷணனுடைய குமாரத்தி திரிசடை என்பவள் மிக்க தயாளகுணமுள்ளவள். சீதை மனம் வருந்தும் காலத்தில் அவள் தேவியைத் தேற்றுவதுண்டு. அவள், தான் கண்ட ஒரு கனவைப் பற்றி மற்ற அரக்கிகளுக்குச் சொன்னாள். 'சகோதரி களே, மகா வீரர்களான அரசிளங் குமாரர்கள் இருவர் பல வனவீரர்களுடன் எனது பெரிய தந்தை இராவ ணேசுவரனுடைய சேனையை எதிர்த்து நிர்மூலஞ் செய்து, எனது தந்தை தவிர, மற்றவர்களை மடித்தனர். எனது தந்தை விபீஷணர் அவர்களால் முடிசூட்டப் பெற்றனர். இத் தேவி சீதை தனது நாதனை முன் போல அடைந்து இன்பம் எய்தினள். ஆதலால் சீதை சாமானியள் அல்லள். அவளைத் துன்பப் படுத்த வேண்டாம்' என்று வேண்டிக் கொண்டாள். அதன் மேல் அரக்கிகள் சீதையை இம்சை யொன்றும் செய் யாது சிறிதுநேரம் கண் உறங்கினர்.



## 16. அநுமான் சீதையைக் காணல்

அநுமான் உயர் மா மொன்றில் உட்காந்திருந்து அசோக வனத்தில் நடந்தவைகளைக் கவனித்ததில், இராவணன் சீதை யிடத்தில் பேசிய வன்மொழிகளை யும், அரக்கிகள் தேவிக்குச் செய்த இம்சைகளையும், இவ்வித ஆபத்துக்களி லிருந்து பிராட்டியார் தப்பின தையும் நேரிலே கண்டார். 'அரக்கியர் கையில் சிக்கிப் பெருந்துயர் அடையும் இவ்வாசி எப்படி உயிர் தாங்கி யிருக்கின்றனரோ அறியேன். இத் தேவியைத் தரு மம் காத்ததோ, தெய்வங்கள் காத்தனவோ, இலங் கேசன் தீவினை காத்ததோ, இல்லையேல் இவாது கற்புத் தான் காத்திருக்க வேண்டும்' என்று மனத்தில் இராம தூதர் பலவாறாக நினைத்தனர். அப்போது, பிராட் டியார் இனி உயிர் வாழ்வதில் பிரயோசன மில்லை என்று பக்கலில் இருந்த ஒரு மாத்தின் கிளை யருகில் சென்று அதை வளைத்தனர். இதைக் கண்ட ஆபத் சகாய்ர் தாம் இருந்த மாத்தி லிருந்து அம் மாத்தில் தாவி, அதிலிருந்து மெல்ல இறங்கி, சீதை முன் 'ராம, ராம' என்று ஜெபித்துக்கொண்டே சென்று கைகூப்பி, வாய் பொத்தி வெகு வணக்கமாக நின்றார்.

சீதாதேவி இராமரைப் பிரிந்த சோகத்தால் வருந் திக்கொண்டிருந்தனரல்லவா? இராவணன் அடிக்கடி அவரிடத்தில் சென்று தகாதவிதமாக வார்த்தை யாடிக்கொண்டிருந்ததால் அவைகள் அவருடைய மனதைப் புண்படச் செய்தன. ஆகையால் அவ் வுத்தமியினுடைய சித்தம் கலக்க மடைந்திருந்தது. இப்படிப்பட்ட சமயத்தில் அநுமார், அன்னை சீதை முன் ராம, ராம என்று சொல்லிக்கொண்டே வந்து

நின்றது அவருக்குக் கனவு போலிருந்தது. அவரைக் கண்டது ஏதோ ஆபத்துக்கு அடையாளமான கெட்ட சகுன மென ஜானகி பிராட்டியார் நினைத்தனர். அநுமான், தன் கணவனிடத்திலிருந்து வந்த தூது வன் என்பதை நம்பவில்லை. தனக்குப் பின்னும் உபத் திரவம் செய்ய இராவணனே கானவன் ரூபங் கொண்டு வந்திருக்கிறனென்பது அவ்வம்மையின் அபிப்பிராயம். ஆதலால் அநுமான் இராமபிரானிடத்திலிருந்து வந்த தூதன் எனத் தேவிக்கு மெய்ப்பிக்க வெகு கஷ்டப் படவேண்டியதாயிருந்தது. மாருதி, மங்கையர்க் கரசிக்குச் சக்கரவர்த்தித் திருமகனுர் திருமேனியின் திவ்விய இலக்ஷணங்களையும் அவரது திவ்விய சரித்தி ரத்தையும் விபரமாகச் சொன்னுர். சர்வலோக சரண் யனுன ஸ்ரீராமப் பிரபுவின் ஊழியன் என்றும் உறுதி கூறி, மேலும் அவர் கைவிரலில் அணிந்திருந்ததும், அவர் அடையாளமாகக் கொடுத்தனுப்பியதுமான அவர் திருப்பெயர் பதித்த திருவாழியைச் சீதை கையில் கொடுத்து நமஸ்கரித்தார்.

அப்பொழுது சீதை அவரை முற்றிலும் சத்திய சீலர் என நம்பினர். 'ஐயனே! உயிர் தந்த உத்த மனே! நான் உய்யுங்காலம் வந்தது. திக்கற்ற எனது துயர் தீர்த்தனை' என்று சொல்லித் திருவாழியைக் கண்களில் ஒற்றிச் சிரமேல் வைத்து, மார்போடணைத்து 'ராம, ராம, ராம' வென்று தியானித்து நின்றனர். பின்னும் தேவி இராகவனிடத்தி லிருந்து பிரிந்ததை யும் இப்பொழுது தாம் தனியாயிருந்து வருந்துவதை யும் பற்றி மனம் கரையும் வண்ணம் சொல்லினர். இராமர் இலங்கைக்கு வந்து கொடிய பாதகனுகிய

இராவணனைக் கொன்று கூடிய சீக்கிரம் தம்மை மீட்க வேண்டுமென்பது தம்முடைய வேண்டுகோள் என்றும் தெரிவித்தனர்.

ஆஞ்சநேயருக்குச் சீதையை அப்போதே முதுகின்மேல் தாங்கிச் சென்று இராமரிடத்திற் சேர்ப்பிக்க வேண்டுமென்று தோன்றிற்று. அதை அவர் பிராட்டியாரிடம் தெரிவித்தார். அதற்கு அக் கற்புடைய மங்கை, 'வீரரே! ஆம், நீர் எண்ணிய வண்ணம் என்னை முதுகின்மேற் கொண்டுபோய்த் தாசரதியின் திருமுன்னர் விடக்கூடியவர் என்பது திண்ணம். ஆயினும் அப்பனே! அப்படிச் செய்வது என்னுடைய கற்பு நிலைமைக்கும் எனது நாதனது பராக்கிரமத்திற்கும் ஏற்றதன்று. சுத்தவீரரா யிருக்கின்ற என்னுடைய கணவர் நேரில் வந்து, இந்தத் துஷ்டனோடு யுத்தம் செய்து, அவனைக் கொன்று என்னை மீட்டுக் கொண்டு போவதே தக்கது. இராவணன் என்னை இவ்விலங்கைத் தீவிற்குக் கொண்டுவந்த தினமே யான் ஒரு நிமிடத்தில் அவனைச் சபித்து எரித்திருப்பேன். அது ஸ்ரீ கோதண்டரது வீரத்துக்குக் குறைவாகுமல்லவா? இம் முயற்சிகள் எல்லாம் வேண்டா' என்றார்.

மாருதி, சீதை சொல்லிய வார்த்தைகளின் உட்கருத்தை அறிந்துகொண்டு, 'அன்னையே! உம்மைப் பிரிந்த நாள்முதல் ஸ்ரீராமர் வெகு துயருற்றுக் காடு மலைகளெல்லாந் தேடி, யாங்கள் வசிக்கும் இருசியமுக பர்வதத்தை வந்தடைந்தனர். அங்கு எமது அரசர் சுக்கிரீவ மகா ராசனோடு நட்புக்கொண்டு, நீர் விமானத்திலிருந்து எறிந்த ஆபரணங்களைக் கண்டு மனந்தேறினர். அவ்வாபரணங்களே அவர் உயிரைக் காத்தன; என்னையும்

உம்மை இவ்விடம் காணச் செய்தன; இனிப் பயப் படாதீர்; அவர் சீக்கிரத்தில் இலங்கைக்கு வருவார்; உம்மைச் சிறைப்படுத்திய இராவணனைக் கொன்று தங்களை மீட்பார். 'இது நிச்சயம்' என்று கூறினர்.

பின்பு சீதையை நேரில் கண்டு பேசினதை அண்டர்நாயகனுக்கு மெய்ப்பிக்கத் தேவியிடத்தி லிருந்து ஏதாவது அடையாளத்தைக் பெற்றுக்கொண்டு போய்க் காண்பிப்பது அவசிய மென்று ஆஞ்சநேயருக்குத் தோன்றிற்று. ஆகவே ஸ்ரீ ராமதூதர் சீதையை ஓர் அடையாளம் தரவேண்டும் என்று கேட்டார். அவ் வம்மை தமது நாதருக்கும் தமக்கு மாத்திரம் தெரிந்த ஒரு விஷயத்தை அவரிடத்திற் சொல்லி, இன்னும் தாம் முன்சிரசில் அணிந்திருந்ததும், இப்பொழுது முன்றானையில் முடிந்திருந்ததுமான **சூடாமணி**யை அவரிடத்தில் கொடுத்தனர்.

அநுமார், தாம் நினைத்து வந்த காரியம் கைகூடினதற்காகச் சந்தோஷ மடைந்தார். சீதாதேவியைத் தனியாக விட்டுவர மனமில்லாதவராகத் தயங்கிப் பின்பு தேறிப் பிராட்டியைப் பக்தியுடன் பன்முறை வலம்வந்து சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு விடையளிக்க வேண்டினர். அதற்கு ஜானகிபிராட்டி அவர் பிரிவை எண்ணி வருந்தி, 'ஐயனே, யான் உனக்கு என்ன கைம்மாறு செய்வேன்? யான் நல்லறத்தினின்று எனது நாதன் திருவடியையே உண்மையாக நம்பினவளாயின் நீ இன்று போல என்றும் சிரஞ்சீவியாக வாழ்க' என்று ஆசீர்வதித்துப் போய்வர உத்தரவளித்தனர்.



## 17. அநுமான் இலங்கையைக் கொளுத்தல்

அநுமானுடைய முக்கியமான வேலை முடிந்தது. ஆயினும் கேவலம் தனக்குக் குறிக்கப்பட்ட வேலையோடு மாத்திரம் நில்லாமல் இராவணனுடைய உண்மையான பலம், அவனுடைய செல்வம், உபகரணங்கள் முதலியவற்றை நன்றாக ஆராய்ந்தறிய வேண்டுமென்று அவர் தீர்மானித்தார்.

உடனே ஆஞ்சநேயர் தேவியைச் சிறைவைத்திருந்த வனத்தை அழிக்க எண்ணி, அங்கு வானுறவோங்கி வளர்ந்திருந்த மரங்களையெல்லாம் வேரோடு பிடுங்கியும் கிளைகளை முறித்தும் அழித்தனர். ஆனால், தேவியார் வீற்றிருக்கும் விருட்சத்தையும் அதைச் சுற்றிலும் உள்ள சில மரங்களையும் மாத்திரம் பிராட்டியாருக்கு நிழல்கொடுக்க வேண்டுமென விட்டு வைத்தனர். ஒரு வலிய கானவன் ஆகாயமளாவிய அசோகவனத்தை அழித்துவிட்டனன் என்ற செய்தி வெளியாகவே இலங்காபுரி முழுவதும் நடுநடுங்கிற்று. இராவணன் மிக்க உக்கிராவேசங் கொண்டான். 'அந்தத் துஷ்டக் கானவனைப் பிடித்துக்கொண்டு வருக' என்று அவன் முதலில் சேனுவீரன் சம்புமாலியுடன் இராக்ஷத வீரர் பலரையும், பின்பு வீராதி வீரரான சேனுபதிகள் விநயாட்சன், யூபாட்சன், துர்த்தாஷன், பிரகத்தன், பாசகர்ணன் என்கிற ஐவரையும், அப்பால் தன்னுடைய இளைய குமாரன் அட்சயனையும் அனுப்பினுன்.

இவர்களில் ஒருவரும் ஆஞ்சநேயருக்கு எதிர் நிற்கமுடியவில்லை. இவர்களையெல்லாம் அவர் அற்பப்

புழுக்களைப்போல நசுக்கி உலர்ந்த புற்காட்டிற் பற்றிய நெருப்புப்போல அவர்கள் சேனைக்குள் புகுந்து ஒரு க்ஷணப்போதில் மடித்துக் குவித்தனர். அதன்பேரில் இராவணன் கடுஞ்சின முற்று அக் கொடியோனைப் பிடித்து வருவேனென்று சொல்லி எழுந்தான். அப்போது அருகிலிருந்த இராவணனுடைய மூத்த புதல்வனும், வில் வித்தையில் தேர்ந்தவனும், ஒரு காலத்தில் இராஜாதிராஜனான இந்திரனை ஜெயித்தவனுமான இந்திரஜித்து என்பவன், அக் கானவனைப் பிடித்துக் காலையும் கையையும் கட்டி அரசசபைமுன் கொண்டு வருவேனென்று தகப்பனிடத்திற் சொல்லி, வெகு ஆடம்பரத்தோடு சண்டைக்குப் போனான். அவன் இரணகளத்தில் தன் தம்பியின் தேகத்தைக் கண்டு வருந்தினான். பிறகு, இந்திரஜித்து, தன் கண்களில் கனல் சிந்தப் பெருஞ் சினங்கொண்டு மாருதியோடு சிறிதுநேரம் யுத்தம் செய்து, அவர் அபாரமான சக்தியுடையவரென்று கண்டான். அநுமானைச் சாதாரண அஸ்திர சஸ்திரங்களால் வெல்ல முடியாதென அவன் அறிந்து, பிரமாஸ்திரத்தைச் செலுத்திப் பிணித்தான்.

பிரமாஸ்திரம் மிக்க வலிமை யுள்ளது. அது பாம்பைப்போல நீண்டு எய்யப்பட்டவரைச் சுற்றிப் பிணிக்கும் இயல்புடையது. அஃது அஞ்சனையின் மைந்தனைப் பிணித்து மூர்ச்சிக்கச் செய்ததால், அரக்கர்கள் அவரை இராவணனிடத்திற் கொண்டுபோவதற்காகக் கயிற்றால் கட்டினார்கள்.

பாசத்தைப்போலத் தன்னைப் பிணித்த இவ்வஸ்திரத்தையும் அறுத்து எறிய வல்லவராயினும், இராவணன் சிம்மாசனத்தில் வீற்றிருப்பதையும், மந்திரி,

பிரதானிகள், பிரபுக்கள் அவனைச் சூழ்ந்திருப்பதை யும் அநுமான் பார்க்க ஆசை கொண்டவராதலால், மூர்ச்சை தெளிந்தும் தெளியாதவர் போல அபிநயித் துச் 'சும்மா இருந்தார். அநுமான் அகப்பட்டதற் காக இராக்ஷதவீரர் பெருமகிழ்ச்சி கொண்டு, அவரைக் கற்களினால் அடித்து உதைத்து இலங்கேசனிடத்தில் இழுத்துக்கொண்டு போயினர். இராவணன், இவரைப் பார்த்து, 'நீ யார்? எங்கு வந்தாய்? அசோகவனத்தை யழித்து, அட்சய குமாரனையும் எனது சைனியங்களை யும் கொன்ற காரணம் யாது?' என்று கோபாவேசத் துடன் கேட்டான். விலை மதிக்கப்படாத முத்து மாலைகளும் பானுவைப்போலப் பிரகாசிக்கும் பொற் கிரீடமும் அணிந்து கொலுவீற்றிருந்த இராவண னைப் பார்த்து ஆஞ்சநேயர், 'இலங்கேசா! நான் அயோத்திக் கதிபனான தசரதச் சக்கரவர்த்தியின் திருக்குமாரர் ஸ்ரீ கோதண்டராமரது தூதன். நீயோ, கண்டங்கள் பலவற்றையும் அடக்கியாளும் பராக்கிரம சாலி, மிகவும் விவேகசாலி, தெய்வபக்தியிற் சிறந்த வன், இத்தகைய பெருமை வாய்ந்த நீ, இரகுநந்தன னுடைய தேவியை அவரில்லாத சமயம் பார்த்து அப கரித்துக் கொண்டுவந்து சிறை வைத்திருப்பது வீரர் களுக்குரிய இலக்ஷணமன்று. அது மிக்க அக்கிரமம். சீதையோ பெண்பால். அவ்வுத்தமியை வருத்து வது மகா பாதகமாகும். இராமபிரானை வெல்ல வல்லவர் இவ்வுலகில் இல்லை. ஆகையால் நீ அவ ருடைய கையிலிருந்து தப்பிப் பிழைக்க விரும்பி னால் உடனே சீதையை ஸ்ரீராமச்சந்திரப் பிரபுவினிடம் நீயே கொண்டுபோய் விட்டு, உன்னை மன்னிக்கும்படி அவரைக் கேட்டுக்கொள், இல்லாவிட்டால் நீ உன்

குலத்தோடு அழிவாய்' என்று சொல்லிப் பின்னும் வாலி மடிந்ததையும், சுக்கிரீவன் பட்டத்தை யடைந்ததையும், சுக்கிரீவன் சேனைகளுடன் ஸ்ரீராமபிரான் இலங்கைக்கு வரப்போவதையும் சொன்னார். ஸ்ரீ கோதண்டராமரது வீரபராக்கிரமங்களை அவர் அவனது மனத்திற் படியும்வண்ணம் போதித்தார். அவ் வரச சபையிலுள்ள அமைச்சர்களும், வயதில் முதிர்ந்தவர்களும் அறியப் பின்னும் பல நீதிகளை எடுத்துக் கூறினார்; மாதரிடத்து மனம்வைத்து மாண்ட மன்னர்களின் எண்ணிக்கை எட்டில் அடங்காதென்பதையும், பிறர் மனையாளையும் பொருளையும் விரும்புதல் தகாத காரிய மென்பதையும் எடுத்துரைத்தார்.

காலவசத்தால் அழிவடையப் போகிற இராவணனுக்கு இவ் வார்த்தைகள் மிக்க உக்கிரத்தை உண்டாக்கின. அவை கேவலம் ஒரு வனவாசியின் வார்த்தைகளென்று அவமதித்தான். அநுமானுடைய கர்வத்துக்காகவும், அவன் இராச்சியத்தில் விளைத்த நஷ்டங்களுக்காகவும் அவனைக் 'கொன்றுவிடும்படி இராவணன் மந்திரிமார்களுக்கு உத்தரவு செய்தான்.

ஆனால், அச்சபையில் மிக்க புத்திமானும் தயாளுவுமானவன் ஒருவனிருந்தான். அவனுக்கு விபீஷணன் என்று பெயர். அவன் இராவணனுடைய இளைய சகோதரன். பகைவரிடத்திலிருந்து வந்த தூதுவரைக் கொல்லுதல் தர்மமன்றென்று அவன் இராவணனுக்குப் பல நியாயங்களை எடுத்துக் காட்டினான். 'அவர்களைத் தண்டிப்பது அவசியமானால், நமது தங்கை சூர்ப்பநகையை அவர்கள் அங்கபங்கம் செய்தது போல, இத் தூதுவனையும் அங்கபங்கம் முதலிய சிறு

தண்டனைகள் செய்து விடுத்தல் நீதியாகும்' என்று கூறினன்.

விதிவலியால் கெடுமதிகொண்டு நிற்கும் இராவணன், அனுமந்தருடைய கைகளில் துணியைச் சுற்றித் தீமூட்டி, மேளம் தாளம் முதலிய வாத்தியங்களோடு ஊரை வலம்வந்து அவரை அவமானப் படுத்த வேண்டுமென்று உத்தரவு செய்தான்.

அவ்வண்ணமே இராக்ஷதர்கள் எண்ணெயில் தோய்த்த துணியைக் கைகளில் பெரிய பந்துபோலச் சுற்றித் தீயிட்டு, சொலித்து எரியும்படி செய்து, அநுமந்தரைப் பக்கத்திற்குப் பதினாயிரம் பேர்களாகச் சூழ்ந்து அவரைக் கயிற்றால் பிணித்துப் பிடித்துக் கொண்டு நகரத்தைச் சுற்றி வரச் செய்தார்கள். இவ் விஷயம் சீதைக்குத் தெரிந்ததும், அத் தேவி மிகவும் வருந்தித் தமது நாதன் ஸ்ரீராகவனைத் தியானித்து, 'யான் கற்புடையவள் ஆகில் அரக்கர்கள் இட்ட தீ ஆஞ்சநேயனைச் சுடாது விடுக' என்று அருளினள். இராவணன் விதித்த இத் தண்டனையும் மாருதிக்கு மகா சந்தோஷத்தைக் கொடுத்தது. இராமபிரான் வந்து இலங்கையில் யுத்தஞ்செய்யுமுன் நகரத்தை அழித்து அவருக்கு அநுகூலம் செய்யலாமெனத் தோற்றியது. அவர் சகலகலா வல்லவராதலால், தம் தேகத்தைப் பெருக்கவும், சுருக்கவும் கூடிய சக்திவாய்ந் தவர். அந்தச் சக்தியினாலே தம்மைக் கயிற்றால் பிணித் துப் பிடித்து வந்தவர்களை, உதைத்துத் துவைத்து, கையில் சுற்றிய பந்தங்களை உதறிப் பிடுங்கிக் கையில் வைத்துக்கொண்டு ஒரே பாய்ச்சலாக மாடமாளிகை களின் மேற் பாய்ந்து கொளுத்திச் சாம்பலாக்கினர்.

நகரம் முழுவதும் ஆகாயம் வரையில் தீ சொலித்தெழுந்தது. அநேக மாடமாளிகைக ளெல்லாம் தீயினுக்கு இரையாகி மண்மீது சாய்ந்தன. கூடகோபுரங்கள் வெடித்துக் குப்புறக் கவிழ்ந்தன. அரக்கர்களுள் சிறியவர்களும், பெரியவர்களும், உயர்ந்தவர்களும், தாழ்ந்தவர்களும் உயிர் தப்ப வழி யறியாது கஷ்டப்பட்டனர்.

சீதையிருந்த இடத்தில் அத்தீநெருங்காது இருந்ததால் தேவியார் சுகமாக இருந்தனர். ஆஞ்சநேயர், இலங்கைக்கு வந்த வேலே வெகு சீக்கிரத்தில் தடையின்றி முடிந்ததால், துஷ்டநிக்கிரகரின் தேவியை மறுமுறை கண்டு நமஸ்கரித்து இரகுநாயகரிடம் செல்லச் சீதையிடம் வந்தார். தேவியார், இவரைக் கண்டதும் ஆனந்தித்து, 'அப்பா! உனது வரவை எனது நாதன் எதிர்பார்த்திருப்பார், சீக்கிரம் போய்வா' என்று அநுக்கிரகித்தார், அதற்கு அவர், 'அப்படியே போய் இராம பிரானே வெகு சீக்கிரத்தில் இலங்கைக்கு அழைத்து வருகிறேன்' என்று சொல்லி விடை பெற்றுக்கொண்டு இலங்கையை விட்டுப் புறப்பட்டார்.

எப்போது வருவாரென்று மகேந்திர மலேயில் எதிர்பார்த்துக்கொண்டிருந்த அங்கதனும், ஜாம்பவானும் மற்ற வன வீரர்களும் களிக்க அநுமான் மறுபடியும் கடலேக் கடந்து இக் கரை வந்து சேர்ந்தார். வந்தவர், இலங்கையின் அமைப்பையும், அசோகவனத்தில் தேவியைக் கண்டதையும், பிறகு அசோகவனத்தை யழித்து, இராவணனேச் சபையில் கண்டு புத்திகூறி, இலங்கையைக் கொளுத்தி வந்ததையும் விவரமாகக் கூறினர். இதைக் கேட்ட வீரர்,

அதிக சந்தோஷமடைந்து அவரை ஒவ்வொருவரும் சேர்த்துக் கட்டி அணைத்தனர். பிறகு தங்கள் இள வரசாகிய அங்கதன் உத்திரவு பெற்று, அருகாமையி லுள்ள சுக்கிரீவ மகாராஜனது மதுவனத்திற்குள் புகுந்து, அவரவர்கட்கு வேண்டிய வரையில் பழங்களை யும், தேனையும் உண்டார்கள். அதனால் அவர்கள் வெறித்து வானரங்களை போல ஒரு கிளையிலிருந்து மற்றொரு கிளைக்குப் பாய்வதும், கிளைகளை முறித்துக் கையிலேந்திக்கொண்டு, "இராமதூதர்க்கு ஜே" என்று கூச்சலிடுவதும், குதிப்பதும், மலைகளின் மேல் ஏறு வதும், பொழில்களில் குதிப்பதும் ஆக இப்படிக் குரங்காட்டங்களாடி அவ்வழகிய நந்தவனத்தை அழித் தனர். அநுமான் சீதையைக் கண்டாரென்பது அவர்க ளுக்குப் பேரானந்தத்தை உண்டாக்கிற்று. இந்தச் சமாசாரத்தை இராமருக்குத் தெரிவிக்க அவர்களனை வரும் புறப்பட்டுக் கிஷ்கிந்தைக்குச் சென்றார்கள்.

ஸ்ரீ கோதண்டராமர், எப்போது ஆஞ்சநேயர் வரு வாரோ, என்ன சமாசாரம் சொல்வாரோ என்று ஒவ்வொரு நிமிடமும் ஏங்கி எதிர் பார்த்திருந்தார். தெற்கே சென்ற வீரர்கள் திரும்பி வரும் ஆரவாரம் கேட்டது. உடனே இராகவர் வெளியில் வந்தார். இவரைக் கண்டதும் ஆஞ்சநேயர், 'கண்டேன்! கண் டேன்! சீதையை! கற்பின் பூஷணத்தைக் கண்டேன்!' என்று சொல்லித் தான் இலங்கைக்குப் போனது முதல் திரும்பிவந்தது வரையில் நடந்த விஷயங்களை யெல் லாம் எடுத் துரைத்தார். தேவியின் பெருமையைப் புகழ்ந்து, அவர் படுந் துன்பத்தையும் சொல்லி வருந்தி, அவர் அடையாளமாகக் கொடுத்த **சூடாமணி**யையும் அநுமான் அமிர்தசொரூபரது கையில் கொடுத்தார்.

சூடாமணியைக் கண்டதும் இராகவர் தமது தேவியைக் கண்டதே போல ஆனந்த மடைந்தார், மார் போட்டணைத்தார், அநுமந்தரை அருகழைத்து மார் புறத் தழுவிக்கொண்டார், ஆசிகள் பல கூறிப் புகழ்ந் தார், சுக்கிரீவனைப் பார்த்து நண்ப! ஒரு காரியத்தை முடித்து வரும்படி அனுப்பப்பட்டு எவன் அக்காரி யத்தை விரோதமின்றி முடித்து, இன்னும் அக்காரி யத்துக்குச் சார்பாயுள்ள விஷயங்களையும் கவனித்துச் சரிவரச் செய்து வருகின்றானோ அவனே உத்தமன். எவன் அனுப்பப்பட்ட காரியத்தை மாத்திரம் முடித் துக்கொண்டு, சார்பாயுள்ள வேறு காரியங்களைச் செய்து முடிக்கும் திறமையிருந்தும் அதைச் செய் யாது மீள்கின்றானோ அவன் மத்திமன், எவன் ஏவப் பட்ட காரியத்தையே செய்து முடிக்க இயலாமல் மீள் கின்றானோ அவனே அதமன். ஆகலின் நமது அநு மான் எமது தேவியைக் கண்டு மாத்திரம் வாராமல் அதற்குச் சார்பாயுள்ள விஷயங்களையும் கவனித்துச் சரிவரச்செய்து இன்னும் அரிய பற்பல காரியங்களை யும் செய்து முடித்து மீண்டதால் இவரை யான் உத்தமோத்தமர் என்று சொல்லாமல் வேறு என்ன சொல்வது?' என்றார். இதைக் கேட்ட சுக்கிரீவன், இலக்குமணர் முதல் யாவரும் மனக் களிப்பெய்தினர்.

சீதை இருக்கு மிடத்தை அனுமான் சொல்லக் கேட்ட இராமர், சமுத்திரத்தைத் தாண்டி, இலங் கைக்குச் சென்று, இராவணனோடு யுத்தம் செய்து, சீதையை மீட்பது எப்படியென்று சிந்திக்கலானார்.



## 18. இராவணனது மந்திராலோசனை

அநுமான் இலங்கையை விட்டுப் புறப்பட்டபின் இராவணனுடைய மனத்தில் பல சந்தேகங்கள் உண்டாயின. அவனுடைய மனம் குழப்பமடைந்தது. அநுமான் இலங்கையில் செய்த வீரச்செயல்களை நினைத்து நினைத்து, கானவர் சேனையின் பலம் எப்படியிருக்குமோவென்று அரக்கன் அஞ்சினான். ஆகையால் அவர்கள் இலங்கைக்கு வாராது தடுப்பதற்கு வேண்டிய உபாயங்களைத் தேடினான். சமுத்திரத்தைக் கடந்து மறுகரைசேர்ந்து சுக்கிரீவ சேனையைப் பற்றி அறிந்துவந்து சொல்லும்படி அவன் ஒற்றர்களை அனுப்பினான். அப்படிச் சென்ற இராக்ஷதர்கள் வன வீரர்களால் அதிக இம்சை யடைந்து வெகு கஷ்டப்பட்டு உயிர்தப்பி ஓடி வந்தனர்.

இனிமேல் என்ன செய்வதென்று யோசிப்பதற்கு, இராவணன் தன்னுடைய மந்திரிகள், சேனாபதிகள், பிரஜைகள் முதலியவர்களை ஒரு சபையாகக் கூட்டினான். அவர்களில் பெரும் பாலார் இராவணனைக் கண்டால் அஞ்சுபவராவர். ஆகையால் அவர்கள் அவனுடைய சேனாபலத்தையும் இராக்ஷதர்களுடைய தைரியத்தையும் புகழ்ந்து, ஒரு நொடிப் பொழுதில் இராமரையும் அவரது சேனையையும் தொலைத்து விடலா மென்று அவரவர்களுடைய வீரப்பிரதாபங்களைச் சொல்லித் தைரியப்படுத்தி அவனது தீச்செயல் யாவும் சரியென்று ஒப்புக்கொண்டனர். இராவணனது பாட்டன் மாலியவான், சீதையைச் சிறை வைத்தது நீதியன் றென்றும், அத் தேவியை ஸ்ரீராமனிடம்

சேர்த்துவிட்டு, அவரிடம் சமாதானம் செய்து கொள்வதே தகுதி என்றும் சொன்னான். அதற்குத் துன்மதியும் மந்திரி சிரேஷ்டனுமாகிய மகோதரன், 'நாம் இப்போது சீதையை விடுவதும் சமாதானம் செய்வதும் கூடா' என்று சொன்ன யோசனையின்பேரில் சீதையை எவ்விதமாகவாயினும் மனைவியாக்கிக் கொள்வதென்றும், இராமனோடு எதிர்த்து யுத்தம் செய்து அவரைக் கொன்று விடுவதென்றும் அவ் வணங்காமுடி மன்னன் தீர்மானித்தான்.

இராவணனுடைய சகோதரன் கும்பகர்ணன் தன் தமையனைப் பார்த்து, 'அண்ணா! நீ வெள்ளம் வந்த பின் அணைபோடப் பார்க்கிறாய். நீ இப்பொழுது எங்களோடு யோசனை செய்வதில் பலனில்லை. சீதையை அபகரிப்பதற்கு முன் எங்களோடு கலந்து ஆலோசனை செய்திருக்கவேண்டும். இராமருடைய உண்மையான பலம் எவ்வளவென்று எனக்குத் தெரியாது. ஆயினும் என் உயிர் உள்ள வரையில் உனக்காக உண்மையாக உயுத்தம் செய்து, நம்மை எதிர்க்க வரும் பகைவரைக் கொன்று சாய்ப்பேன்' என்றான்.

இராவணனுடைய மற்றொரு சகோதரனாகிய விபீஷணன் சொன்ன வார்த்தைகள் கும்பகர்ணனுடைய வார்த்தைகளுக்கு முற்றிலும் மாறானவை. இராவணனைப் பார்க்கிலும் இராமர் மிக்க பலமுடையவரென்றும், அவர் மனிதரல்லர், தெய்வமேயென்றும், சீதை மகா கற்புடைய உத்தமியென்றும் அவன் சிறிதும் பயப்படாது எடுத்துக் காட்டினான். மற்றும் சபையோரைப் பார்த்து, எனது மூத்தோன் கெடுமதி கொண்டு செய்ய ஆரம்பித்த இந்தத் தீச்செயல்கள்

அவனையும் அவனுடைய பாம்பரையையும் வேரோடு களைந்துவிடு மென்பது நிச்சயம். ஆகையால் சீதையை இராமரிடத்தில் ஒப்பித்துவிட்டு அவரோடு சமாதானம் செய்துகொள்வது உத்தமம்' என்றும் சொன்னான்.

செல்வச் செருக்கால் இறுமாந்திருக்கும் இராவண னுக்கு விபீஷணன் சொன்ன வார்த்தைகள் ஒன்றும் காதில் நுழையவில்லை. மூர்க்கனும் முதலையும் கொண் டது விடா ஆதலால், விபீஷணன் கெட்ட எண்ணத் தினால் இப்படிச் சொல்லுகிறானென்று அவன்மேல் குற்றஞ்சாற்றி, இராவணன் அவனை நோக்கி, 'போதும் போதும் எனக்குரைத்த புத்தி. அடே விபீஷணா, நீ என் பகைவரினும் மிகக் கொடியவன். நீ என் சகோதரனாக இருக்கிறாய். ஆகையால் நான் உன்னைக் கொல்லாது விடுகின்றேன், ஓடிப்பிழை' என்று கடுகடுத் துக் கூறினான். விபீஷணன் தான் சொன்ன சொற்கள் பயன்படவில்லை யென்றும், இராவணனுக்கு அழிவு காலம் சமீபித்து விட்டதென்றும் கண்டான். ஆகை யால் அவன் இலங்கையில் இனி இருக்கப்படாது என்று நினைத்துத் தனக்குள்ள எல்லாவற்றையும் துறந்து அந் நகரை விட்டு நீங்கி இராமபிரானை அடுத் துச் சரணாகதி யடைந்தான்.

இராமபிரான் மிக்க இரக்க முடையவர், அநாத ரட்சகர், அடைக்கலம் புகுந்தவருக்காகத் தம்மையும் தத்தம்செய்யும் சுபாவமுடையவர். அவர் விபீஷ ணனை அன்புடன் உபசரித்து, அவன் விஷயமாகச் சுக்கிரீவனிடத்தும் அநுமானிடத்தும் ஆலோசித் தனர். அப்போது சுக்கிரீவன், 'அண்ணலே! இவ் விபீஷணன் நமது சத்துருவினிடத்திலிருந்து வந்

திருக்கிறான்; அன்றியும் இவன் செய்கையைச் சற்றுக் கவனியுங்கள். நட்டாற்றில் கட்டவிழ்த்தது போல, ஆபத்காலத்தில் அண்ணனை விட்டு வந்திருக்கிறான். ஆதலால் நிதானித்துச் செய்யுங்கள்' என்றான். அதற்கு அநுமான், 'சுக்கிரீவ மகாராஜரே! நீர் சொல்வது சரிதான். ஆயினும், இவ் விபீஷணர் யான் இராவணன் சபைக்குச் சென்றிருந்தபோது தூதுவரைக் கொல்லப்படாது என்று பல நீதிகளை எடுத்துரைத்து என்னைக் காத்த உத்தமர். இவர் புத்திரி திரிசடை நமது பிராட்டியாரை அப்போதைக் கப்போது பல தேறுதல்கள் சொல்லித் தேற்றுபவள். ஆதலால் யாதொரு யோசனை யில்லாமலே இவரை நம்முடன் சேர்த்துக் கொள்ளலாம், என்றார். அதன் பேரில் இராகவர், 'விபீஷணா! அஞ்சல், உன்னை இராவணனுக்குப் பதிலாக இலங்கைக்கு அரசனாக்குவோம்' என்று அபயமளித்தனர்.

இராவணனோ தன் விதிவசத்தால் விபீஷணனைத் துரத்திவிட்டான். பிறகு தான் கூட்டிய சபையையும் கலைத்துவிட்டு, தன்னுடைய சேனாபலத்தைக் குறித்துக் கர்வித்து, தனக்கு நாசத்தைச் சீக்கிரத்தில் வருவிக்கும் நயவஞ்சகர்களுடைய பேச்சில் நம்பிக்கை வைத்து, மிகவும் தைரியமா யிருந்தான். அவன் இலங்காபுரியை முன்னிலும் நன்றாக அரண்செய்து பலப்படுத்தி யுத்தத்திற்கு வேண்டியவற்றைத் தயார் செய்தான்.



## 91. இராமர் இலங்கைக்கு அணைகட்டுதல்

இலங்காபுரிக்குச் செல்வதாயின் சமுத்திரத்தைக் கடக்கவேண்டும், அப்படிச் செய்ய அணைகட்ட வேண்டும். அதற்கு என்ன செய்யலாம் என்று சுக்கிரீவனை இராமர் கேட்டார். 'அதற்கு என்ன யோசனை ! நமது சேனையில் உள்ள சிற்ப சாஸ்திரி நளனைக் கொண்டு இக் கரைக்கும் இலங்கைத் தீவிற்கும் ஒரு பாலம் கட்டவேண்டியதே' என்றான் சுக்கிரீவன். அதன்படியே சேனையில் உள்ளோர் யாவரும் நளன் விதித்தபடி மலைகளையும் பெரிய மரங்களையும் பெயர்த்துக் கடலில் இட்டுக் கூடிய சீக்கிரத்தில் அணைகட்டி, அவ்வணைக்கு இராமசேது என்று பெயரிட்டனர்.

அவ்வாராவதியின் மூலமாக இராம லக்ஷ்மணர்களிருவரும் தங்கள் சேனா சமுத்திரத்துடன் சிரமமின்றி இலங்கைக் கரையை அடைந்தனர். அவர்கள் அங்குச் சுவேல மலையில் சேனைகளுக்கென்று நளனால் அமைக்கப்பட்ட பாசறையில் தங்கினார்கள். அதில் சக்கரவர்த்தித் திருமகனார்க்கும், இளையபெருமாள், சுக்கிரீவன், விபீஷணன், அநுமான் முதலியவர்க்கும் தனித்தனி விடுதிகள் அமைக்கப்பட்டன.

இராமச்சந்திரப் பிரபு சுக்கிரீவன், நீலன், அங்கதன், அநுமான் ஆகிய நால்வரையும் நான்கு வாயில்களில் நிறுத்திச் சேனைகளையும் அதற்கேற்ப அணிவகுத்து நகரத்தை முற்றுகை செய்தனர். இவ்வாறு சுக்கிரீவ சேனை இலங்காபுரியை முற்றுகை செய்து வருவதை இராவணன் தன்னுடைய அரண்மனையிலிருந்து கண்டான்.



## 20. இராம இராவணர் யுத்தம்

இராமபிரான் தம் சேனுசமுத்திரத்தோடு இலங்கைக்குச் சென்றதும் மறுநாள் காலையில் சுவேலே மலையின் மீதேறி, இராவணன் யுத்தத்திற்கு தயாராய் வடக்குவாயிலில் வந்து நின்றிருப்பதைக் கண்டார். இன்னும் இலங்கைப் பட்டினத்தின் அமைப்பையும் நன்கு கவனித்தார். உயுத்தம் தொடங்குமுன், ஒரு தூதனை யனுப்பி இராவணனுக்குப் புத்தி புகட்டலாமா என்றெண்ணினுர். உடனே ஸ்ரீராமன், அங்கதனைக் கூப்பிட்டு, 'நீ போய், சீதையை விட்டு விடுகிருயா? அல்லது உயுத்தம் செய்கின்ருயா என்று அவ்வரக்கனைக் கேட்டு வா' என்றனர்.

அங்கதன் அங்ஙனமே சென்று தான் தூதுவந்த செய்தியைச் சொல்ல, அவ்வரக்கன் கடுங்கோபங் கொண்டு தூதனைக் கட்டிச் சிறைவைக்கச் சொல்லினன். அங்கதன் ஏவலாளரைப் பிடித்துத் தள்ளி விட்டு, ஒரே பாய்ச்சலில் சுவேலே மலைக்கு வந்து ஸ்ரீராகவனிடம் நடந்ததைத் தெரிவித்தான்.

இரகுவீரர், இனி யோசிப்பதில் பயனில்லை என்று நினைத்து உயுத்தம் தொடங்க உத்தரவளித்தனர். உடனே சுக்கிரீவ சேனை கர்ச்சித்தெழுந்து இலங்கைக் கோட்டையைத் தாக்கி மதில்களை இடித்து அகழியில் தள்ளித் தரைமட்ட மாக்கின. எதிரிகள் இல்லையென்று இறுமாந்திருந்த இராக்ஷத வீரர்கள் இதைக் கண்டதும் வீராவேசம் மூண்டு வனவீரர்களுடன் கைகலந்து போர் புரிந்தனர். இவ்வாறு நடுராத்திரி வரையில் அகோரமான யுத்தம் நடந்தது. வனவீரர் மலைகளையும் மரங்களையும் பிடுங்கி இராக்ஷத சேனைமேல்

விட்டெறிந்தார்கள். இராம லக்ஷ்மணரும் பாணங்களை மழைபோல வருஷித்தனர். அதனால் அநேக இராக்ஷதர்கள் மாண்டனர். நாக்கறு பட்டவர்களும் மூக்கறு பட்டவர்களும் கைகால் அற்றவர்களுமாகப் பலர் இராக்ஷதர் பூமியில் வீழ்ந்தனர். சுக்கிரீவ சேனையிலும் பலர் மடிந்தனர்.

அப்போது இராவணன், கோதண்டபாணியாய்த் தம்பியுடன் நிற்கும் ஸ்ரீராமனை வந்து எதிர்த்தான். இதுதான் சமயமென்று ஸ்ரீராமபிரான் அநுமான் தோளின்மீதிருந்து அரிய கணை ஒன்றை விடுத்து இராவணன் பிடித்திருந்த வில்லைத் துண்டித்தார். மற்றுமொரு கணையை விட்டு அவன் தேரை முறித்து, தேர்ச்சாரதியையும் குதிரைகளையுங் கொன்று, அவன் கவசத்தையும் அறுத்தெறிந்தார். அதனால் இலங்கை வேந்தன் திடுக்கிட்டு இன்னது செய்வது என்று அறியாது நிராயுத பாணியாய் நிலத்தில் நின்றான். இரகுவீரன் தயாளுவானதால் அவனுடைய நிலையைக் கண்டு வருந்தி, 'ஏ! இராவணா! நீ மிகவும் பராக்கிரம சாலியே, இன்று நீ செய்த யுத்தம் வியக்கத்தக்கதே. நீ எய்த பேரம்புகள் என் சேனையை அலைக்கழித்தன. நீயும் மிகக் களைப்புற்றாய், ஆகலின் இவ் வளவில் போரை நிறுத்துகின்றேன். நீ இன்று போய்ச் சிரம பரிகாரம் செய்துகொண்டு மீண்டும் நாளை வா' என்றனர். அஞ்சா நெஞ்சு படைத்த இலங்கேசன் நாணித் தன் அரண்மனையை அடைந்தனன்.



## 21. கும்பகர்ண வதம்

இராம லக்ஷ்மணர் மறுநாள் காலையில் மறுபடி யுத்தம் தொடங்கினர். இராக்ஷதவீரர்கள் பலர் வந்து வீராவேசத்துடன் எதிர்த்தனர். ஆயினும், இராமர் சரமாரி பொழியவே அவர்க ளனைவரும் பூமியில் வீழ்ந்து மடிந்தனர். தூம்ராக்ஷன், வச்சிரதந்தன், அகம்பன், பிரகஸ்தன் முதலிய கொடிய இராக்ஷத வீரர்கள் வெகுநேரம் சுக்கிரீவ சேனையை எதிர்த்தும் வெற்றியடையாது தாம் இருந்தவிடம் தெரியாமல் பஞ்சாய்ப் பறந்தனர்.

யுத்தம் நடக்கும்விதம் இராவணனுக்குத் திருப்தி கரமாயில்லை. அதன்மேல் இராவணனுக்காக உயிரையும் கொடுப்பேனென்று பிரதிக்கினை செய்த தன் தம்பி கும்பகர்ணனை வரவழைத்து யுத்தம் செய்ய அனுப்பினன். உயரமாயும், பருத்த தேகமுடையவனும் இருந்த அவன், கையில் கதை ஏந்தி நகர வாயிலைத்தாண்டி வரவே, அவனுருவைக் கண்ட சுக்கிரீவ சேனைக்குத் திகிலுண்டாயிற்று. வனவீரர்களான ஜாம்பவான், சுக்கிரீவன், அங்கதன், நீலன் முதலியோர் மரங்களையும் மலைகளையும் பிடுங்கி எறிந்து இராக்ஷதவீரனன கும்பகர்ணனை அடக்க முயன்றனர். அவர்களுடைய எத்தனங்கள் பலிக்கவில்லை.

இராமர் விடுத்த பாணங்கள் கும்பகர்ணனைப் பலமாய்த் தாக்கின. ஆயினும் அவைகளுக்கெல்லாம் அவன் சிறிதும் பின்வாங்காது ஆட்டுமந்தையிற் புகுந்த புலியேபோல ஸ்ரீராமனது சைனியத்திற் புகுந்து கொன்று பிணக்குவியலாக்கி, அதனினின்றும்

இரத்தம் ஆறாகப் பெருகும்படி செய்தனன். பிறகு, வீராதி வீரனும், இராவணனைச் சத்துருவாகக் கொண்டவனுமாகிய ஸ்ரீராமபிரான் நிற்குமிடத்தை நாடி வந்து கடும்போர் புரிந்தான். நெடுநேரம் யுத்தம் செய்தபின் ஸ்ரீராமன் அவனுடைய கை, கால்களை அர்த்தசந்திர பாணங்களால் அறுத்தெறிந்தார். அப்போதும் அவன் நிலத்தில் உருண்டு கொண்டே சென்று, சிலரைப் பல்லாற் கடித்தும், தலையால் முட்டியும் வதைத்தனன். இதைக் கண்ட இரகுவீரர் தேவாஸ்திரம் ஒன்றை அவன் தலைக்குக் குறிவைத்து விட்டார். அந்த அஸ்திரம் அவனுடைய தலையை வீழ்த்திச் சென்றது. கும்பகர்ணனது தலையற்ற உடல் பூமியின்மேல் விழுந்தது. அவன் இறந்தது இராவணனுக்கும் மற்ற இராக்ஷதவீரருக்கும் மிக்க திகிலை உண்டாக்கிற்று.



## 22. இந்திரஜித்து வதம்

திரிசிரன், தேவாந்தகன், நராந்தகன், அதிகாயன் முதலியவர்களும், மற்றைய இராக்ஷதர்களும் கும்ப கர்ணன் இறந்ததால் துக்கசாகரத்தில் மூழ்கி யிருந்த இராவணனைத் தேற்றுவது தங்கள் கடமை யென்று எண்ணினர்கள். அவர்கள் யுத்தகளத்திற்குச் சென்று யுத்தம் செய்து, இதுவரையிலும் அடைந்த அவ மானத்தை நீக்கி ஜெயத்தோடு திரும்புவதாக இரா வணனுக்கு வாக்களித்தார்கள். அவ்வண்ணமே அவர் கள் யுத்த களத்திற்குச் சென்று பகைவரோடு உக் கிரமாக யுத்தம் செய்து உயிரை இழந்தனர். பின்னர் யுத்தத்திற்கு வந்த இராவணனுடைய மந்திரிகளுள் மகோதரன் சுக்கிரீவனலும், மகாபாரிசன் அங்கத னலும் வெகு சீக்கிரத்தில் கொல்லப்பட்டனர்.

இராக்ஷத வீரரில் மகா வீரனெனப் புகழப்படும் இராவணனது மூத்த புதல்வன் இந்திரஜித்தன் பொன் மயமாய் விளங்கும் இரதத்திலேறி எண்ணிறந்த சேனு வீரர் சூழ்ந்து வர யுத்தத்திற்குச் சென்முன். தனது மயா சக்தியினுல் இருள் அடர்ந்த இடத்திலிருந்து வெகு நேரம் யுத்தம் பண்ணினன். அவனே எதிர்த்து யுத்தம் செய்த வனவீரர்கள் பலர் மாண்டனர்.

எவராலும் ஜெயிக்கமுடியாத இராம இலக்ஷ் மணர்களே எதிர்த்து யுத்தம் செய்து வெல்ல வேண்டு மென்பது அவனுடைய விருப்பம். ஆகையால் அவன் வில்லே வளேத்து முதலில் இலக்குமணன்மேல் சரமாரி யாகப் பாணங்களேப் பிரயோகித்தான். இலக்ஷ்மணர் பொறுமையோடு சிறிதுநேரம் அவனுடைய பாணங்

களைக் கண்டித்துப் பிறகு தாமும் சரமாரி பொழிந்து அரக்கர் சேனையை அழித்தனர். அப்பொழுது இந்திரசித்தன் மிக்க பிரசித்தி பெற்ற பிரமாஸ்திரத்தை அவர்மீது பிரயோகித்தான். அந்த அஸ்திரம் இலக்ஷ்மணரைப் பிணித்து மூர்ச்சிக்கச் செய்தது. அதனால் இளையவீரர் நெடுநேரம் மூர்ச்சை தெளியவில்லை.

ஸ்ரீராகவன் மூர்ச்சித்த தன் தம்பியை மார்பின் மீது சாத்திக்கொண்டு, 'ஏ வீராதிவீரா! யான் உன்னை இழந்தபின் என் சத்துருவை ஜெயித்தென்ன? என் தேவி சீதையை மீண்டும் பெற்றென்ன?' என்று வருந்தி மெய்ம்மறந்தனர். அப்பொழுது ஜாம்பவான் தமது சேனையிலுள்ள மருத்துவர் சுசேணரை வரவழைத்து இதற்கு என்ன செய்யலாமென்று கேட்க, அவர் அநுமானை அழைத்துச் சஞ்சீவிமலை யிருக்கும் இடத்தைத் தெரிவித்து, அதில் உள்ள சில மூலிகைகளை வெகு சீக்கிரத்தில் எடுத்து வரும்படி சொல்லினர். அம் மூலிகைகள் இறக்குந்தறுவாயில் உள்ளவர்களையும் உயிர்ப்பிக்கிற அற்புதமான சஞ்சீவி எனப்படும். அவை படுகாய மடைந்தவர்களுடைய இரணங்களையும் ஆற்றத்தக்கவை. உடனே அநுமான் வாயு வேகமாகச் சென்று அம் மூலிகைகள் வளர்ந்துள்ள மலையின் பெரும் பாகத்தையே பெயர்த்து எடுத்துக்கொண்டு வந்தார்.

மருத்து மலையிலிருந்து வந்த காற்றினாலேயே பலர் பலம்பெற்றெழுந்தனர். இலக்ஷ்மணர் சஞ்சீவியின் சகாயத்தால் மூர்ச்சை தெளிந்து ஒரு காயமுமில்லாமல் முன்போலச் சுகதேக முடையவ ராயினர். இலக்ஷ்மணர் மூர்ச்சை தெளிந்து எழுந்தவுடன்

அநுமான் அந்த மருத்து மலையை முன்போல இருந்த இடத்தில் கொண்டுபோய்ச் சேர்த்தனர்.

இலக்ஷ்மணர் மூர்ச்சை தெளிந்தார் எனக் கேட்ட மேகநாதன், திடசித்தம் உடையவனாயினும், சற்றுத்தயங்கி நிகும்பலை யாகத்தைத் தேவதாப் பிரீதியாகச் செய்து பலம்பெற எண்ணினான். இதற்குள் கும்பன், நிகும்பன், மகாராக்ஷசன் முதலிய இராக்ஷத வீரர்களை யுத்தத்திற்கு அனுப்பினான். அவர்கள் மாருதியால் மாண்டனர். உடனே இந்திராஜித்து செய்யப்போகும் யாகத்தைப் பற்றி விபீஷணர் ஸ்ரீ கோதண்ட மூர்த்திக்குச் சொன்னார். அவன் யாகத்தை முடிப்பானானால் அவனை யாவராலும் ஜெயிக்க முடியாதென்றும் எடுத்துரைத்தார். அதன் மேல் இராமர், இலக்ஷ்மணரைப் பல வனவீரர்களோடு இந்திராஜித்து யாகம் செய்யுமிடத்திற்கு அனுப்பினார். இலக்ஷ்மணர் பல அற்புதமான அஸ்திரங்களைப் பிரயோகித்து இந்திராஜித்தினுடைய சித்தத்தைக் கலைத்தார். அதனால் இந்திராஜித்து தன் யாகத்தைப் பூர்த்தி செய்யாது குறையாக விட்டு யுத்தத்திற்கு எழுந்தான். இருவரும் வெற்றி தோல்வி இல்லாமல் வெகுநேரம் யுத்தம் செய்தனர். கடைசியில் இலக்ஷ்மணர் தேவாஸ்திரம் ஒன்றை எடுத்து மந்திரித்து, அதை இந்திரசித்தின் மீது பிரயோகித்தார். நீதியே எப்பொழுதும் வெற்றி பெறுமாதலால் அந்த அஸ்திரத்துக்குத் தப்ப இந்திரசித்தினால் முடியவில்லை. அது அவனுடைய தலையைக் கொய்துகொண்டு சென்றது. அதனால் இந்திரசித்தின் உடல் அடியற்ற மரம்போல நிலத்தில் விழுந்தது.



## 23. இராவண வதம்

இராவணனுக்கு அழிவுகாலம் சமீபித்த தென்பதற்கு இந்திரஜித்து இறந்ததைவிட வேறு துர்க்குறி வேண்டிய தில்லை. கோபாக்கினி தீப்போல மூண்டெரிய, இராவணன் கையில் வாளை எடுத்துக்கொண்டு, சீதையைக் கொன்று பழிக்குப்பழி வாங்குவேன் என்று அசோக வனத்துக்கு ஓடிச் சென்றான். அவனுடைய மந்திரிகளில் ஒருவனான சுபார்சன் அப்போது அவனைத் தடுத்து, 'அரசே! நீர் கேவலம் நிரபராதியாகிய ஒரு ஸ்திரீயை வாளால் வெட்டுதல் தங்கள் கௌரவத்திற்கு அடுக்குமா?' என்று சொல்லித் தடுத்தான். அதனால் சீதையைக் கொல்லும் எண்ணத்தை ஒழித்து இராவணன் தான் பல தேசங்களிலின்றும் வல்லவர்களைச் சேகரித்து யுத்த முறையில் பழக்கி ஆபத்காலத்திற்கென வைத்துள்ள மூலபலச் சேனையைத் தருவித்து அதனுடன் யுத்தகளம் சென்றான்.

மூலபல யுத்தம் வெகு மும்முரமாக நடந்தது. அன்று ஒருவரை யொருவர் புடைத்து யுத்தம் செய்தது மிகவும் பயங்கரமாக இருந்தது. யுத்தம் நடக்கும்போது இராவணன், அங்குத் தன் தம்பி விபீஷணன், இராம இலக்ஷ்மணருக்கு நண்பனாயிருந்து யோசனை சொல்லிக்கொண் டிருப்பதை உற்று நோக்கினான். உடனே இராவணன் மகா சக்திவாய்ந்த வேல் ஒன்றை விபீஷணன்மேல் எறிந்தான். சமீபத்திலிருந்த இலக்ஷ்மணர் அந்த ஆயுதம் விபீஷணனைத் தாக்காது தடுக்கும்படி முன் வந்தனர். சக்தி இலக்ஷ்மணருடைய மார்பில் பாய்ந்து ஊடுருவவே இலக்ஷ்மணர் மூர்ச்சித்

துக் கீழ் விழுந்தார்; மிக்க வேதனை யடைந்தார். அச் சம்பவத்தைக் கேட்டு இராமர் அவ்விடம் வந்து மூர்ச்சித்திருக்கும் இலக்ஷ்மணரைக் கண்டு கலங்கிக் கண்ணீர் விட்டனர். உடனே மருத்து மலையிலிருந்து எடுத்துவைத்த பச்சிலையை மறுபடியும் சுஷேணர் இலக்ஷ்மணருக்குக் கொடுத்து மூர்ச்சை தெளிவித்து இரணத்தை ஆற்றினர். தம்பியார் முன்போலச் சுக மடைந்து எழுந்ததைக் கண்டு இராமரும் மற்றுமுள்ள வீரரும் மனமகிழ்ந்தனர். இராமபிரான் முன்னிலும் பன்மடங்கு பலமுள்ளவராய் இராவணனை நேரில் சென்று எதிர்த்தனர்.

இராமர் அநேக அற்புத அஸ்திரங்களைத் தமது வில்லில் தொடுத்து விடுத்தார். அவை யொன்றும் இராவணனைத் தாக்காது திரும்பின. இன்னும் பல கணைகளை இடைவெளி யில்லாது விடுத்தனர். அவை களும் பயனிலவாயின. அதனால் காகுத்தர் களைப்பு அடைந்தவர்போலக் காணப்பட்டார். ஆயினும் உடனே மனத்திடமெய்திக் கோதண்டராமர் முன்னிலும் பன் மடங்கதிகமான கிளர்ச்சியோடு யுத்தம் செய்து, அகஸ் தியர் தந்த பாசுபதாஸ்திரத்தால் அவன் விடுத்த தேவாஸ்திரங்கள் பலவற்றையும் முறிபடச் செய்தார். பின்பு இராமர் பிரமாஸ்திரத்தை எடுத்து இராவணன் மார்புக்கு இலக்குவைத்து விடுத்தார். அது எவராலும் வெல்லுதற்கரிய பராக்கிரமசாலியின் மார்பைத் துளைத்து உயிரை உண்டு மறுபுறத்தே பாய்ந்தோடியது. மகா வீரனான இராவணன், ஸ்ரீ இரகுவீரனது திறத்தைத் தெரிந்தும் சரணமடையாது மானத்திற்கஞ்சித் தன்னால் கூடிய பரியந்தம் மகா உக்கிரமாக உயுத்தம் செய்தே

உயிர் விட்டனன். இதைக்கண்ட மகா உத்தமியான இராவணன் பத்தினி மண்டோதரியும் மற்றுமிருந்த வீரர்களின் மனைவியரும் உயிர்வாழ மனமில்லாது தீயிற் புக்கனர். விபீஷணன், விரோதப்பட்டுத் தன் தமையன் இராவணனைப் பிரிந்து வந்து பகைவருடன் கூடினனேனும், தன் ஆயுளளவும் தான் செய்த கடும்போர்களில் வெற்றியே யன்றி தோல்வி யென்பதறியாத சுத்தவீரன் இரணக்களத்தில் செயலற்று விழுந்திருப்பதைக் கண்டதும், தானுடாவிட்டாலும் தன் தசையாடும் என்பதுபோல, உடல் துடித்து வாய்விட்டுக் கதறி யழுதனன். பிறகு இரகுநாதன் தேற்றத் தேறி அவரது ஆக்கினையின்படி, விபீஷணன் இராவணனுக்கும் மற்ற உறவினர்க்கும் செய்யவேண்டிய ஈமக்கிரியைகளைச் செய்து முடித்தனன்.

ஜெயராமர் இலக்ஷ்மணரைக் கொண்டு விபீஷணனுக்கு முடிசூட்டுவித்து அவனை இலங்காபுரிக்கு அரசனாக்கினார். விபீஷணன், முடி சூடியதும் பட்டாபிஷேகத்திற்கு இலக்ஷ்மணருடன் வந்திருந்த சுக்ரீவ மகாராஜரை அழைத்துக்கொண்டு, ஸ்ரீ ராமபிராணிடத்திற்கு வந்து அவருடைய திருவடிகளில் விழுந்து வணங்கினன். அப்போது ஜெயராமர் 'விபீஷணா! நீ பல்லாண்டு இவ்விலங்கையை ஆண்டு பெரியாரை வழிபட்டு, ஏழைகளுக்கு இரங்கி, கற்புடைய மங்கையர்களைக் காப்பாற்றிவரக்கடவாய்' என்று ஆசீர்வதித்தார்.



## 24. சீதாதேவி இராமநாதனை அடைதல்

இராவணனை வென்றபின் தமது அன்பன் விபீஷணனை இலங்கைக்கு அரசனாக முடிசூட்டினதும், கற்புக்கரசியாகிய தமது தேவி சீதையின் துயரை மாற்றுவதே ஸ்ரீராமரது கடமையாய் இருந்தது.

* சிறைப்பட்டிருந்த காலத்தும், யுத்தம் நடந்த காலத்தும் பாதவித்திருந்த பிராட்டியை ஜெயராமன் ஆக்கினைப்படி விபீஷணன், பல்லக்கில் ஏற்றிப் பல தாதிமார்களும் வனவீரரும் சூழ்ந்துவர அழைத்துக் கொண்டு இராமரிருக்குமிடம் வந்தான். அப்பொழுது ஜானகீரமணன் தன் தேவி இருக்கும் நிலைமையைக் கண்டு வருந்தி ஒரு கணம் அசைவற்றிருந்து, பின்னர் மிக்க ஆவலோடு சென்று தழுவிப் பாசறைக்கு அழைத்துச் சென்றனன்.



---

* 1 வால்மீகத்திலும் கம்பராமாயணத்திலும் சீதை சிறைப்பட்டிருந்த காலம் பத்து மாதங்கள் என்றும், யுத்த காலம் பௌர்ணிமை முதல் அமாவாசை வரையில் 15 - நாட்கள் என்றும் கண்டிருக்கிறது.

2 சிலப்பதிகாரம் — நீர்ப்படைக் காதையுள்

'உயிர்த்தொகை யுண்டவொன்பதிற் றிரட்டியென்
றியாண்டு மதியு நாளுங் கடிகையு
மீண்டுநீர் ஞாலங் கூட்டி யெண்கொள'

என்றிருப்பதால் இராம ராவணர் யுத்தம் பதினெட்டு மாதங்கள் நடந்ததாகக் கொள்ளப்படுகிறது.

## 25. ஸ்ரீராம பட்டாபிஷேகம்.

இராமர் வனவாசம் செய்யவேண்டுமென்று குறிக்கப்பட்ட பதினன்கு வருடங்கள் கடந்தன. அவர், தாம் உடனே அயோத்திக்குத் திரும்பிப் போய் அரசாட்சியை ஏற்றுக்கொள்ளாவிடில் பரதன் மனம் பரதவித்து என்ன துன்பத்திற் காளாவனே என்பதை அறிவாரல்லவா? ஆகையால் அவர் அயோத்திக்குத் திரும்பிப் போகப் புறப்பட்டார். இலங்கைக்கு அரசனை விபீஷணன் புஷ்பக விமானத்தைக் கொண்டு வந்து அதிலேறிச் செல்லும்படி அவரை வேண்டிக் கொண்டான். இராமர், இலக்ஷ்மணன் சீதாதேவி அநுமான் சுக்கிரீவன் விபீஷணன் முதலாக மற்றுமுள்ள சேனையோடும் அதிலேறினர். அந்த விமானம் மெதுவாக மேலெழுந்து ஆகாய மார்க்கமாகக் காற்றினும் வேகமாய் அயோத்தியை நாடிச் சென்றது. செல்லும் மார்க்கத்தில் இராமர், தாம் வனவாச காலத்தில் தங்கின பற்பல இடங்களையும், தாம் செய்த வீரச் செயல்களைக் குறிக்கும் ஸ்தானங்களையும், ஜானகிக்குக் காண்பித்து அவள் மகிழச் செய்தனர்.

ஆகாய மார்க்கமாகச் சென்ற அக் கூட்டத்தவரனைவரும் கிஷ்கிந்தையில் விமானத்தை இறக்கி அங்குள்ள அரச மங்கையர்களாகிய சுக்கிரீவன், அங்கதன் முதலியோருடைய மனைவியர்களையும் அதிலேற்றிக் கொண்டு மறுபடியும் ஆகாய மார்க்கமாக விமானத்தைச் செலுத்தினர். அப்படி வரும்வழியில் பரத்துவாஜ மகரிஷியினது ஆச்சிரமத்தை அடைந்தனர். ரிஷிசிரேஷ்டரும் அவர்களை அங்கே ஒருநாள் தங்கி விருந்துண்டு போகும்படி கேட்டுக்கொண்டார். அதனல்

இராமர் தம் வரவை முன்னால் பாதனுக்குத் தெரிவிக்கும் பொருட்டுத் தம் விரலாழியையும் அடையாளமாகக் கொடுத்து அநுமானை அயோத்திக்கு அனுப்பி, தாமும் தம் பரிசனங்களும் அங்குத் தங்கினார்கள்.

பாதனை நாடிச்சென்ற அநுமான், வழியில் குகனையடைந்து நடந்த விஷயங்களைச் சொல்லி அவனை ஆனந்திக்கச் செய்து, ஸ்ரீராமருடைய வரவை மிகுந்த ஆவலுடன் எதிர்பார்த்திருந்த பாதனிடம் வந்து சேர்ந்தார். அப்போது பாதன் இராமநாம ஸ்மரணை செய்துகொண்டே பாதுகா பூசை முடித்து, அங்குள்ளோரைப் பார்த்து, 'பெரியோர்களே! இராமபிரான் சொல்லியபடி இன்றோடு பதினான்கு வருடமும் முடிந்தது; இதுவரையில் அவர் வந்து சேர்ந்திலர்; ஆகலின் எனது நியமனப்படி யான் இன்று இத் தீப்புகத் தீர்மானித்துள்ளேன்' என்று உறுதியாகக் கூறி, தீயை வலம்வரப் புறப்பட்டனன். அத் தறுவாயில், அநுமான், 'இராம, இராம' என்ற சத்தத்துடன் ஸ்ரீராமனது விரலாழியைக் கையிலேந்தியபடியே பாதன் முன் வந்து நின்றார்.

இராமபிரான் வருகிறாரென்ற சுபமொழியை அநுமான் சொல்லக் கேட்டுப் பாதன் மிக்க சந்தோஷமடைந்தனன். அவன் அந்தச் சுபச்செய்தியை உடனே ஜனங்களுக்குத் தெரிவித்து இராமரை நல்வாவேற்க அயோத்தியா நகரத்தை அலங்கரிக்கச் செய்தான். மறுநாள், பாதன் தன்னுடைய குடிஜனங்களோடு புறப்பட்டுப் போய்ப் பாத்துவாஜ மகரிஷியினுடைய ஆச்சிரமத்திலிருந்து வந்துகொண்டிருந்த ஸ்ரீராமரைக் கண்டு ஆவினைத் தேடிச்செல்லும் கன்றேபோல ஓடி,

அவர் திருவடிகளில் விழுந்து, அத் திருவடிகளை இரு கைகளாலும் சேர்த்துப் பிடித்தபடியே நமஸ்கரித்து உடல் பூரித்தான்.

இராமர் பரதனைத் தூக்கி எடுத்து அன்புடன் தழுவிக்கொண்டபின், பக்கத்தில் வணங்கி நின்ற சத்துருக்கனனையும் சேர்த்து அணைத்தனர்! பரதனோடு வந்த அன்னை கௌசல்யையும், சிற்றன்னையர் கைகேயி, சுமித்திரை ஆகிய இருவரையும், அடிபணிந்து ஆசி பெற்றனர். புருஷோத்தமனுடைய யோக க்ஷேமங்களை விசாரித்த பிறகு பரதன் தன்னிடமிருந்து இராச்சிய பாரத்தை நீக்கி ஆட்கொள்ள வேண்டுமென்று தமயனைப் பணிவுடன் வேண்டினான். அதே பிரகாரம் வசிட்டரும், மந்திரி சுமந்திரரும், பிரஜைகளும் ஸ்ரீகோதண்டரை வேண்டினார்கள். இராமபிரான் அவர்களுடைய இஷ்டத்திற்கு இசைந்தார்.

மந்திரிகளும் வசிஷ்ட முனிவரும் உடனே சுப முகூர்த்தம் ஒன்றைக் குறித்து, அதில் பட்டாபிஷேகத்தை நடத்த ஏற்பாடுகள் செய்தனர். பிறகு ஸ்ரீ கோதண்டராமனையும் தேவி சீதையையும் சர்வாலங்காரங்களுடனும் பட்டத்து யானையின்மீது ஆரோகணிக்கச் செய்து, இலக்ஷ்மணன், பரதன், சத்துருக்கனன், விபீஷணன், சுக்கிரீவன் முதலியவர்களும், வசிஷ்டர் முதலிய முனிவர்களும், மந்திரி சுமந்திரர் முதலியவர்களும் அணி அணியாக அவரவர்களுக்குரிய வாகனங்களில் ஊர்ந்துவர, அனுமானும், அங்கதனும் மெய்காப்பாளருடன் வாள் ஏந்தி முன்னே செல்ல, நந்திக்கிராமத்திலிருந்து இத்தனை வைபவத்துடன் ராஜ ஊர்கோலம் புறப்பட்டு அயோத்தி நகரின்

இராஜ வீதிவழியாக அரண்மனை வந்து சேர்ந்தது. அப்போது இராஜ மார்க்கத்தின் இருபுறத்திலும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் நெருங்கியிருந்து நறு மலர் தூவினர். அங்குச் சர்வ மங்களவாத்தியங்களும் முழங்கின. ஜெயராமன் அரண்மனை வாசல் சேர்ந்ததும் சுமங்கலிகள் பலர் ஆரதிகள் பல சுற்றி, மங்கல கீதங்கள் பாடி, அழைத்துச் சென்றனர்.

குறித்த சுபதினத்திலே நல்லோரையில் ஸ்ரீராமச் சந்திரரையும் சீதாதேவியையும் புண்ணிய தீர்த்தங் களால் திருமஞ்சனம் செய்வித்து, சர்வாலங்காரமும் செய்து, அநுமான் தாங்கி நிற்கும் நவரத்தினங்க ளிழைத்த அரியணையில் அமர்த்தி, பரதன் வெண் குடை பிடிக்கவும், இலக்குமணர் சத்துருக்கனர் இரு வரும் சாமரம் வீசவும், அங்கதன் உடைவாள் ஏந்தி நிற்கவும், வேளாள வள்ளல்கள் மகுடத்தை எடுத்துக் கொடுக்க வசிஷ்ட முனிவர் சீதாபதிக்குத் திருமுடி சூட்டினர். அப்போது அரசாங்க இயல்பின்படி சிற் றரசர்களுக்கும், இராவண யுத்தத்தில் உதவிய வீரர்க ளுக்கும பல பரிசுகளும் பட்டங்களும் கொடுத்தனர். இழந்த தனத்தை மீண்டும் பெற்றவர்போல மகிழ்ந்து அச் சுபதினத்தைக் குடிகள் கொண்டாடினர்.

பட்டாபிராமர் மிக்க கீர்த்திபெற்ற தமது முன் னோர்களின் சிம்மாசனத்தில் வீற்றிருந்து பல்லாண்டு அயோத்தியை ஆண்டார். அவருடைய அரசாட்சியில் பிரஜைகள் யாவரும் மிக்க சந்தோஷத்தையும், சமா தானத்தையும், சர்வ சுதந்திரங்களையும் பெற்றுச் செல்வவந்தராக வாழ்ந்தனர்.

சுபம்

# கதாநாயகனும், மற்றவர்களும் நடந்துகொண்ட முறையினின்றும் நாம் அறிந்துகொண்ட நீதிகள்

1. பெரியாரை வழிபடுதல் —

ஸ்ரீராமலக்ஷ்மணர்கள் வசிஷ்டர் விசுவாமித்திரர் முதலிய பெரியாரை வழிபட்டு அநேக அஸ்திர சஸ்திரப் பிரயோகங்களைக் கற்று, அதன் பயனாக அநேக அரக்கர்களை வென்று, பின்னும் நல்லறமாகிய இல்லறத்தை நடத்த நன்மனைவியர்களையும் பெற்றனர்.

2. சொன்ன சொல்லைக் காப்பாற்றல் —

ஸ்ரீகோதண்டராமன் தனது தந்தை தசரதச் சக்கரவர்த்தியின் சொல்லைக் காப்பாற்று நிமித்தம் தனக்குரிய அரசுரிமையையும் இழந்து பதினான்கு வருடமும் காட்டிற் சஞ்சரித்தனன். இன்னும் இது காரணமாக இன்னல் பலவும் அநுபவித்தனன். இத் தகைய துன்பங்களை யெல்லாம் அநுபவிக்க நேரிட்டது சொன்ன சொல்லைக் காப்பாற்றுவதற் கல்லவா ?

இன்னும் சொன்ன சொல்லைக் காப்பாற்றக் காகுத்தர், பதினான்கு வருடம் கழிந்ததும் நாட்டிற்கு வந்து பரதனிடமிருந்து இராஜ்ய பாரத்தை ஏற்றனர்.

3. குரு சிஷ்யக்கிரமம் —

ஸ்ரீகோதண்டராமன் சரிதமாகிய இராமாயணத் தைச் செய்தவர் வால்மீக முனிவர். இவர் இவ்வரிய பெரிய காவியத்தைச் செய்து முடித்தது குருசிஷ்யக் கிரமமாக நாரதரிடத்துத் தாம் கேட்டுத் தெரிந்த ஸ்ரீகோதண்டராமன் சரிதத்தை மிக விமரிசையாக வெளிப்படுத்தியதே யாகும்.

**4. மாதா பிதாக்களிடத்தில் புத்திரன் நடந்துகொள்ள வேண்டிய விதம் —**

ஸ்ரீ ராமபிரான் பிதா இட்ட கட்டளைப்படி மனந் தளராது நாட்டைவிட்டுக் காட்டுக்கேகினன். அதனால் பிதாவி னிடத்து அவனுக்கு அன்பு குறைந்திலது. காட்டுக்குப் புறப்பட்டபோதும், மறுபடியும் அயோத் திக்குத் திரும்பி வந்தபோதும் தனது அன்பு, பணிவு முதலியவைகளை அன்னை கௌசல்யைக்குக் காட்டியது போலவே, கைகேயி, சுமித்திரை ஆகிய சிற்றன்னை களிடத்தும் புத்திரன் நடந்துகொள்ள வேண்டிய விதிப் படி நடந்து காட்டினன்.

இந்திரசித்தும், அட்சயகுமாரனும் தமது தந்தை இராவண னிமித்தம் உயிரையும் துறக்க யுத்தஞ்செய்ய முன் வந்தனர். இதுவும் புத்திரர்கள் பிதாவை இரட் சிக்கத் தாங்கள் நடந்துகொள்ளவேண்டிய விதமாகும்.

**5. சகோதாரிடத்தில் அன்பு —**

ஸ்ரீராமர் காட்டுக்குச் செல்லுகிறார் என்று கேட்ட வுடனே இளையபெருமாள் தனக்குரிய செல்வாக்கை யும் பெண்டிரையும் துறந்து தனது தமையனது போஷணார்த்தம் மெய்காப்பாளராக உடன் சென்றார் அல்லவா? இதுவே சகோதாரிடத்தில் செலுத்த வேண்டிய அன்பு.

பரதன் தனது தாய் கைகேயி செய்த சூழ்ச்சி யால் அண்ணல் காட்டிற்கேக நேர்ந்ததைக் கேட்டு மனம் துடித்து, அரசை வெறுத்து, கானகத்தை அடுத்து, பாதுகைபெற்று, மாவுரி உடுத்து, நகரத் தின் புறத்தே இருந்து, ஸ்ரீராமப் பிரதிநிதியாகத்

தமையனது கட்டளைப்படி ஏவல் செய்துவந்த உத்தம சகோதரனது உள்ளன்பு அல்லவோ அன்பு எனப் படும் ?

வீராதிவீரனான கும்பகர்ணன் தனது தமையன் இராவணனுக்குப் பல நீதிகளினால் சிதைக்குச் செய்த தீங்கைக் கண்டித்துக் காட்டினானாயினும், தன் தமை யனுக்காகப் பெரும் போர் செய்து கை, கால்கள் அற்று விழுந்த காலத்தும், உடலால் உருண்டு சென்று, தலையால் முட்டி, அமர்க்களத்தை அல்லோலகல் லோலம் செய்து கடைசியில் ஆவியும் துறந்தனன். இது சகோதரரிடத்தில் உள்ள அன்பைக் குறிக்கும்.

**6. அதருமத்தின் விளைவு —**

கைகேயி தர்ம நீதியாக மூத்த புதல்வனாகிய ஸ்ரீராமனுக்குக் கிடைக்க வேண்டிய அரசை, இளை யோனாகிய தன் புதல்வன் பரதனுக்குக் கொடுக்கும்படி செய்த சூழ்ச்சியால் இராமன், காட்டிற்கேகினதன்றிப் பரதனும் அரசை ஏற்காது நாட்டைத் துறந்து பதி னான்கு வருடமும் மரவுரி உடுத்துக் காய்கனி புசித்துத் துறவியைப்போல இருக்க நேர்ந்தது. இது அதரு மத்தின் விளைவு அன்றோ ?

இராவணன், மகா விவேகியும் பராக்கிரமசாலியும் கண்டங்கள் பலவற்றையும் அடக்கியாளும் ஆற்றலும் தெய்வபக்தியும் உள்ளவனாய் இருந்தும், பிறன்மனையா ளின்பால் வைத்த தகாத ஆசையினால் அல்லவா அவன் தன் குலத்தோடு அழிய நேர்ந்தது ? இதுவும் அதரு மத்தின் விளைவாகும்.

மகா பலசாலியும் கிஷ்கிந்தைக் காசனுமாகிய வாலி, தன் சகோதரன் சுக்கிரீவனை அவன் பரிவாரங்க

ளுடன் நியாயமின்றி நகரத்தைவிட்டு நீக்கி அவனது மனைவியையும் அபகரித்தானல்லவா? அத் தீச்செயலின் பயனாகத் தன் அரசை யிழந்தது மன்றித் தானும் அழிந்தனன்.

**7. இழிசன ரியற்கை —**

சூர்ப்பநகை அரக்கியாதலால் இராம லக்ஷ்மணர்களை அடுத்து, பெண்களுக்குரிய நாணத்தையும் விடுத்து, தன்னை மணம் செய்துகொள்ளும்படி வேண்டினள். அப்படிச் செய்து கொள்ளாததின் காரணமாக ஸ்ரீராமபிரானது பத்தினியாகிய சீதையைத் தன் தமையன் இராவணனிடம் சொல்லி அபகரிக்கச் செய்தனள். இது இழிசன ரியற்கையாகும்.

**இழிசன சகவாசம் —**

வால்மீகர் உயர்குலத்திற் பிறந்தவரா யிருந்தும் தமது பருவ காலத்தில் இழிகுலத்து மாது ஒருத்தியை மணந்ததனாலன்றோ வேட்டையாடியும், வழிப்பறி செய்தும், மற்றையோர்க்குத் துன்பத்தை விளைத்தும் காலத்தைக் கழிக்கவேண்டி நேர்ந்தது.

ஒரு சக்ரவர்த்தியின் பட்டமகிஷியாகி எல்லா நற்குணங்களும் வாய்ந்த கைகேயி, இழிகுலத்துதித்துக் கேவலம் தன் பணிப் பெண்ணாயிருந்த கூனி மந்தரையின் துர்ப்போதனைக்கு இணங்கியதனாலல்லவா தனது நாதன் தசரதனை இழக்கவும், ஸ்ரீராமனை வனம்போக்கவும், பரதனை நாட்டைத் துறந்து சந்நியாசிக் கோலம் மேற்கொள்ளவும் இன்னும் இவைபோன்ற துன்பங்களுக்கும் ஏதுவாக்கியது?

### 8. மனைவியும் புருஷனும் ஆசரிக்கவேண்டிய நீதிகள்

சீதை ஓர் அரசன் மகளாய்ப் பிறந்து சக்கரவர்த்தித் திருமகனுக்கு வாழ்க்கைப்பட்டாளாயினும் தனது நாதன் காட்டிற் கேகுகின்றார் என்று கேட்டதும், காட்டில் வசிப்பதனால் ஏற்படும் துன்பங்களையுங் கருதாமல் தனது நாயகன் நிழலேபோல உடன் சென்று இன்பதுன்பங்களைச் சமமாக அநுபவிக்கத் தீர்மானித்தனள். இதுவன்றோ மனைவியின் மாண்பு?'

ஸ்ரீராமபிரான் தன் மனையாளின் பிரியப்படி காட்டிற்கு வந்தபோதும் உடன் அழைத்துச் சென்று வனவாசத்தையும் நகரவாசமாகக் கொண்டனர். சீதையைப் பிரிய நேரிட்டபோது ஆற்றொணுத்துயர் அடைந்து தம் மனைவியின்பாலுள்ள காதலினால் மலைகளையும், அருவிகளையும், மரங்களையும், கொடிகளையும், மிருகங்களையும், பட்சிகளையும் நாடிச் சென்று 'நீங்கள் எனது மனைவியைக் கண்டீர்களா? எங்குறைகின்றாள்' என்று வினவினர். தம் மனைவிக்காகச் சுக்கிரீவனிடம் சிநேகம் கொண்டு, வாலியைக் கொன்று, கடலைக் கடந்து இராவணனுடன் பெரும் போர் செய்தனர், தம் தேவி சீதையை மீட்டனர். இச் சதிபதிகள் அன்புருவா யிருந்து நடந்துகொண்ட தர்மங்களை ஆசிரயிப்பதல்லவோ இல்லற தர்மமாகும்?

### 9. எல்லாரிடத்திலும் தயை —

சபரி ஏனும் வயோதிக ஸ்திரீ அன்புடன் அளித்த காய் கனிகளை விருப்புடன் ஏற்றது, ஸ்ரீராமபிரான் எளியோரிடத்து தாம் துன்புற்ற சமயத்தும்மையோடு இருந்ததை வெளிப்படுத்துகின்றது.

யுத்தம்முடிந்து சீதையைமீட்டுச் சேனை சமூகத்துடன் ஆகாய விமானமேறி அயோத்திக்குச் செல்லும்போது கிஷ்கிந்தையில் இறங்கிச் சுக்கிரீவன், அங்கதன் முதலியோர்களின் மனைவிகளையும் உடன் அழைத்துச் சென்றது, அவர் காம்பீர்யத்தைக் காட்டுகின்றது.

10. நன்றிமறவாதிருத்தல் —

சுக்கிரீவன் தனக்கு அரசையும், தனது தமையன் அபகரித்த மனைவியையும் மீட்டுக் கொடுத்த ஸ்ரீராமபிரானது நன்றியை மறவாது அவர்க்குத் தனது உடல், பொருள், ஆவி மூன்றையும் தத்தம் செய்து ஸ்ரீராமபிரானுட னிருந்து அவர் மனைவியை மீட்க உதவியது நன்றி மறவாமையன்றோ ?

ஸ்ரீராமபிரான், ஜடாயு என்னும் பறவை தனக்காக இராவணனுடன் யுத்தஞ்செய்து படுகாயப்பட்டு விழுந்திருந்ததைக் கண்டு வருந்தி, உயிர் நீத்தபின் அதற்குத் தகனக்கிரியைகள் செய்தமை நன்றிமறவாமை அல்லவா ?

11. பிறர்பொருளை விரும்பாதிருத்தல் —

வாலியை வென்று கிஷ்கிந்தையைக் கைப்பற்றின போதும், இராவணனை வென்று இலங்கையைக் கைப்பற்றினபோதும் அந் நகரங்களையாவது, அல்லது அந் நகரங்களில் இருந்த உயர்ந்த பொருள்களையாவது, ஸ்ரீராமபிரான் தாமடைய விருப்புற்றாரில்லை. அவைகளை முறையே சுக்கிரீவனுக்கும் விபீஷணனுக்கும் அளித்தனர். இதனால் பிறர்பொருளை விரும்பாதிருக்க வேண்டும் என்பது பெறப்படுகின்றது.

**12. தைரியமுள்ளவனாய்ச் சாந்தமடைந்திருத்தல்—**

ஸ்ரீ கோதண்டராமன் தனக்கென்று ஏற்பட்ட இராஜ்யத்தைக் கைகேயியின் சூழ்ச்சியால் துறந்த காலத்தும், பம்பாதீரத்தில் வசித்து வந்தபோது தன் தேவியைப் பிரிய நேர்ந்த காலத்தும், புஜபல பராக்கிரம சாலியாகிய இலங்கேசனுடன் யுத்தஞ் செய்ய நேரிட்ட காலத்தும் தைரியமுள்ளவனாய்ச் சாந்த மடைந்திருந்த தனுலல்லவோ ஜெயராமனனது?

அநுமான் அகன்று ஆழ்ந்த அலைகடலைக் கடக்கும்போதும், தன் கையில் தீயிட்டுக் கொளுத்திய போதும் தைரியமுள்ளவராய்ச் சாந்தமடைந் திருந்தா ரல்லவா?

**13. யுத்தகளத்தில் புறங்காட்டாது நிற்றல்—**

ஸ்ரீராம லக்ஷ்மணர்கள் யுத்த களத்தில் முன் வைத்த காலைப் பின்வாங்காது எதிரியின் சேனைகள் புறங்காட்டி ஓடும்வரையில் யுத்தஞ்செய்து பாசறைக்குத் திரும்பினதும், யுத்த களத்தில் புறங்காட்டாது நிற்றல் என்னும் வீரச் செய்கையைக் குறிக்கின்றது.

**14. சத்துருக்களிடத்தில் செலுத்தவேண்டிய தர்மம்—**

இராவணன் முதல்நாள் யுத்தத்தில் உடன் கொண்டுவந்த சேனைகளெல்லாம் நிர்மூலமாகித் தன் தேரும் சாரதியும் அழியக் கைவில்லும் ஒடிந்து நிராயுதபாணியாய் நின்ற காலையில் ஸ்ரீராமபிரான், அவன் நிற்கும் நிலையைக்கண்டு மனமிரங்கி, அவன் பகைவனேயாயினும் நிராயுதபாணியாய் நிற்கும்போது கொல்லப்படாதென்று 'இன்றுபோய் நாளைவா' என்று சொல்லி அனுப்பினர். இதுவே சத்துருக்களிடத்தில் செலுத்தவேண்டிய தர்மமாகும்.

15. அடைக்கலம் புகுந்தவர்களை ஆதரித்தல் —

விபீஷணன் பகைவனது சகோதரனும், அரக்கனுமா யிருந்தும் ஸ்ரீராமபிரானை வந்து அடைக்கலம் புகுந்தபோது, சுக்கிரீவன் கூடியவரையில் தடுத்தும் 'அடைக்கலம் புகுந்தவர்களை ஆதரிப்பதே அரசரது கடமை' என்று சொல்லி இரகுராமர் ஆதரித்தனர்.

16. எந்தக் காரியத்தையும் சித்திபெற வேண்டின் நிதானித்துச் செய்தல் —

சுக்கிரீவன் தனது இராச்சியத்தை விட்டு வனவாசியாய்த் தன் கூட்டத்தாருடன் சித்திரகூட பர்வதத்தில் சகோதரனாகிய வாலிக்குப் பயந்து மலைக் குகையில் ஒளித்திருந்தானேனும், அவன் கூட்டத்தில் இருந்த மதி மந்திரிகளாகிய அநுமான் முதலியோர்களின் அருமை பெருமைகளை ஸ்ரீராமன் அறிந்தவராகி, 'இச் சுக்கிரீவனிடம் நாம் நட்புக் கொள்வோமாயின் நாடிவந்த காரியம் சித்தியாகும்' என்று நிதானித்துத் தீர்மானித்தவராய், அநுமான் மூலமாகச் சுக்கிரீவனுடைய நட்பைப் பெற்றனர். சுக்கிரீவனுடைய நட்புதான் ஸ்ரீகோதண்டராமர்க்கு இலங்கையைக் கடக்கவும், இராவணனை மடிக்கவும், சீதையை மீட்கவும் ஏதுவாயிற்று. இதனாலேயே எந்தக் காரியத்தையும் சித்திபெற வேண்டின் நிதானித்துச் செய்தல் நலம் என்பதை அறியலாம்.

'Caxton  Press,'

Madras.